


# கல்கி

ஸ்வீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...

KALKI ● 11.07.2010 ● ரூ.10.00 ● 96 பக்கங்கள்

● பற்றி எரியும் பெட்ரோல்!

● மூச்சுத் திணறும் சென்னை!

ஊர்வசி எழுதும்

## காலை எழுந்தவுடன் சிரிப்பு!

புதிய தொடர்

பட்டுப்புடைவை பரிசு!

**ஆன்மிகம்**
அருள்வாக்கு 33
கண்டறியாதன கண்டேன் 74
ராசிபலன் 28

**அமரர் கல்கி பக்கம்**
சுதந்திர ஜீவனம் 39

**அரசியல்**
பழ.கருப்பையா பேட்டி 90
காதில் விழுந்தவை 81
தலையங்கம் 14
தராசு 04

**சிறுகதைகள்**
ரோஷினி 30
படுதலம் சுகுமாரன் 66
மொழிபெயர்ப்புக் கதை (ராஜ்ஜர்) 54

**தொடர்கள்**
வண்ணநிலவன் 34
லதா சேகர் 94

**சினிமா**
நதியா பேட்டி 42
மணி ரத்னம் பேட்டி 18
விஜய் - இறங்கு முகமா? 86

**வாசகர் ஏரியா**
கவிதை கஃபே 16
மை பைக் 80
என் செல்லமே 38

**இந்த வார ஸ்பெஷல்**
பற்றி எரியும் பெட்ரோல் 82
காணாமல் போகும் கால்வாய்கள் 62
பிரைவேட் சுடுகாடு 78

**கோடைக்காலப் போட்டி முடிவு** 07

# கல்கி

11.07.2010

உளர்வசி எழுதும்
காலை எழுந்தவுடன் சிரிப்பு! -8

• அமிர்தா, சென்னை

*ராவணனுக்கு பிடித்த கார் எது? ராமருக்குப் பிடித்த கார் எது?*

''நகைச்சுவை பேர் சொல்லும் பிள்ளையாக'' என் மகன் இருப்பானா, என்பதைத் தெரிந்துகொள்ள இந்தக் கேள்வியை IIT பம்பாயில் படிக்கும் என் மகனுக்கு அனுப்பினேன்.... ''மகன் தந்தைக்கு ஆற்றும் காமெடிக் கடமையாக'' அவன் அனுப்பிய பதில்.... நமக்கெல்லாம் நானென்று ஒரு அகங்காரம் என்றால், பத்து தலை ராவணனுக்கு அகங்காரம் பத்து. அவனுக்குப் பிடித்த கார் 'டி-10'. ராமருக்குப் பிடித்த கார் மாருதி! கிருஷ்ணருக்குப் பிடிக்காத கார் 'கம்ZEN'....!

• மு.மதிவாணன், அரூர்

*''பிளேடு'' கண்டு பிடிப்பதற்கு முன்னால், அந்தக் காலத்தில் ''ஷேவிங்'' செய்ய என்ன செய்திருப்பார்கள்....?*

என்ன செய்வது என்று தெரியாமல் முடியைப் பிய்த்துக் கொண்டிருப்பார்கள்!

பொன்ன வெக்கற
எடத்துல
பூவ வெக்கலாம்!

• அ.க.கிருஷ்ணன், புதுச்சேரி

*புயலுக்குப் பேர் வைக்க உங்களைக் கேட்டால் என்ன பேர் வைப்பீர்கள்?*

CYCLONEUS SHYCLONE என்று வைப்பேன். புயல் வெக்கப்பட்டு வீசாமல் போய்விடும்....!

• சர்மிளா, டெல்லி

***IS GOD DEAD....?***

இரணியனுக்கு DEADLY. பிரகலாதனுக்கு LIVELY. நம்மைப் போல் அல்லாது IS-WAS, பிறப்பு-இறப்பு கடந்த கடவுள் ஆதியான EVER PRESENT Mr.BEEN....!

# உங்கப்பனுக்கும் பொக்கே!

• சீனிவாசன், அண்ணா நகர்

*காலையில் எழுந்தவுடன் கழுதை முகத்தில் விழிக்க*

*வேண்டுமா. மனைவி முகத்தில் விழிக்க வேண்டுமா?*

"ASS" you please!



● என்.லதா,பழனி

***'A' FOR APPLE... சின்ன 'a' FOR?***

'A' FOR பெரிய அதாவது ''அப்பா ஆப்பிள்''....'a' for ''பையனாப்பிள்''!

● ஆர்.கோபாலன்,மேற்கு மாம்பலம்

***கிரேஸியாரின் பார்வையில் செஞ்சோற்றுக் கடனில் சிறந்தவன் கும்பகர்ணனா இல்லை கர்ணனா....?***

செஞ்சோற்றுக் கடனுக்காக அண்ணனுக்கு ஆதரவு அளித்தவன் கும்பகர்ணன். அதே செஞ் சோற்றுக் கடனுக்காகச் சொந்தத் தம்பிகளையே பகைத்துக் கொண்டவன் கர்ணன்....

கும்பகர்ணனை விடக் கர்ணன் செஞ்சோற்றில் ஒருபடி மேல்!

● சிக்ஸ் முகம்,விஜயமங்கலம்

***திருமணத்துக்குப் போனால் நீங்கள் மொய் எழுதுவீர்களா?***

எனக்கு வரும் அழைப்பிதழ்களுக்கு மொய் எழுத ஆரம்பித்தால், அப்புறம் என் மகன்களுக்கு உயில் எழுத முடியாது. அதனால் ''உனக்கும் பொக்கே. உங்கப்பனுக்கும் பொக்கே!''

● வரத.சண்முக சுந்தரவடிவேலு,
வாழப்பாடி

***படைப்பதற்கு-பிரம்மா, காப்பதற்கு- விஷ்ணு, அழிப்பதற்கு-சிவபெருமான். அழிக்கின்ற கடவுளை நாம் ஏன் வணங்க வேண்டும்?***

வெள்ளை நிற பிரம்மா - சாக்பீஸ், கருப்பு நிற விஷ்ணு-கரும்பலகை, சந்தன நிற சிவன்-டஸ்டர். அழிக்காமல் அடுத்த கணக்கு போட முடியுமா. பிரம்மாவால் பிறப்பர், விஷ்ணு புரப்பர், சிவனால் இறப்பர். மூவருமே அந்த வகையில் அழிக்கும் 'ரப்பர்'தான்!





# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர்:
லக்ஷ்மி நடராஜன்

ஆசிரியர் : சீதா ரவி
பொறுப்பாசிரியர் :
ஆர்.வெங்கடேஷ்
உதவி ஆசிரியர்கள் :
கதிர்பாரதி, அமிர்தம் சூர்யா
வடிவமைப்பு :
எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், பா.கோபால்

தொலைபேசி : 044 - 4343 8888
தொலைநகல் : 044 - 4343 8899
ஆசிரியர் குழு :
044 - 4343 8822
kalki@kalkiweekly.com
விளம்பரப் பிரிவு :
044 - 4343 8811
marketing@kalkiweekly.com
சந்தா பிரிவு :
044 - 4343 8833
subscription@kalkiweekly.com
விற்பனை பிரிவு :
044 - 4343 8844
sales@kalkiweekly.com

இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

இணையதளத்தில்...
வாங்கி, வாசித்து, மகிழ...
www.sangapalagai.com

சந்தா விவரம் (ஒரு வருடம்) :
உள்நாடு : ரூ.500/-
வெளிநாடு : ரூ.3,800/-

கல்கி பில்டிங்க்ஸ்,
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

இதழில் வெளியாகும் விளம்பரங்களின் உண்மைத் தன்மைக்கு கல்கி நிர்வாகம் பொறுப்பல்ல.

# நீங்கள் கேட்டவை-தராசு

● பா.உதயகுமார்,
சென்னை-2

? சென்னை, கொல்கத்தா உள்ளிட்ட நாற்பது விமான நிலையங்கள் லைசென்ஸ் இல்லாமல் இயங்குகின்றன வாமே?

! விமான நிலையக் கட்டுப்பாட்டுத் துறைக்குச் செலுத்த வேண்டிய வருடாந்திர லைசென்ஸ் கட்டணத்தைச் செலுத்திப் புதுப்பிக்க மறந்துவிட்டார்களாம்! அந்த அளவுக்கு விமான நிலையச் செயல்பாடுகளும் பராமரிப்பு குறித்த கட்டுப்பாடுகளும் மறந்துபோன விஷயங்களாகி விட்டன! அப்புறம் விபத்துகள் நேரக் கேட்பானேன்!

● காசிதாசன், கோவிலூர்

? தி.மு.க. அரசை மைனாரிடி அரசு என்று சொல்லிவந்த அ.தி.மு.க. கூடாரம் குறைந்துகொண்டே தானே வருகிறது?

! இருக்கலாம். ஆனால் அதனாலேயே தி.மு.க. அரசு மெஜாரிடி அரசாகி விடவில்லையே!

● மு.பெரியசாமி,
விட்டுக்கட்டி

? இந்தியாவில் இன்று எல்லோருமே ஜாதியை வைத்துக்கொண்டுதான் அரசியல் நடத்துகிறார்கள் என்று டாக்டர் ராமதாஸ் கூறுகிறாரே?

! பாம்பின் கால் பாம்பறியும்! மக்கள்தான் புதர் மண்டிக் கிடக்கும் அரசியலைச் செப்பனிட்டு, ஜாதிப் பாம்புகளை விரட்டி, அரசியல் பூந்தோட்டம் அமைக்க வேண்டும்.

● பா.அசோக், விருதுநகர்

? போபால் விஷவாயு வழக்கில் இந்திய அரசால் தப்பவிடப்பட்ட ஆண்டர்சன், தற்போது மறதி நோயால் அவதிப்படுகிறார் என்றும், அதனால், எந்தக் கேள்விக்கும் அவரால் பதிலளிக்க முடியாது என்றும் அவரது மனைவி சொல்கிறாரே?

! மெய்யோ பொய்யோ நமக்குத் தெரியாது. எவ்வாறாயினும், இவ்வளவு காலத்துக்குப் பிறகு ஆண்டர்சனை இங்கே கொணர்ந்து வழக்கு நடத்த நினைப்பது, போகாத ஊருக்கு வழி கேட்பதுபோல்தான். அவரை நமது அரசு தப்பவிட்டதும், அவர் சார்ந்திருந்த நிறுவனத்திடம் மிகக் குறைந்த அளவில் நஷ்டஈடு பெற ஒப்புக் கொண்டதும்தான் சோகம். இதை போபால் மக்கள் என்ன... எந்த இந்தியனாலும் மன்னிக்க முடியாது.

## சூன் என்றால் என்ன?



● ஜி.ஜெயராமன், கூந்தலூர்

? திருப்பதி கோவிலில் உடை கட்டுப்பாடு விதித்திருப்பது பற்றி தராசின் கருத்து என்ன...?

! தவறு எதும் இல்லை. ஆலய தரிசனம் என்னும் போது, சில கட்டுப்பாடுகள் இருக்க வேண்டியதுதான். மனக்கட்டுப்பாட்டுக்கும் அது உதவும்.

● உஷா சுதர்சன், திருச்செங்கோடு

? "அனைத்துத் தகுதிகள் இருந்தும் இந்தி மொழி தெரியாததால், ராணுவத்தில் முக்கிய பதவிகளைத் தமிழர்களால் பெற முடியவில்லை," என்று கர்னல்

தாமஸ் ஆபிரகாம் தெரிவித்துள்ளாரே?

! இரண்டு விஷயங்களைத் தாமஸ் உறுதி செய்துள்ளார். நன்றி. ஒன்று, 'ஆங்கிலமும் மத்தியில் ஆட்சி மொழியாக நீடிக்கும்', என்ற உறுதி மொழியை மத்திய அரசு புறக்கணித்து வருகிறது. மற்றது மாநில அரசு இந்தப் புறக்கணிப்பை மௌனமாக ஏற்றுக் கொண்டு வருகிறது. ஒன்று, உறுதிமொழி கடைப்பிடிக்கப் பட வேண்டும்; அல்லது ஹிந்தி கற்க, கற்பிக்க வகை செய்ய வேண்டும். தமிழனை நட்டாற்றில் விடக்கூடாது.



✱ போகாத ஊர்!

● தி.சௌ.ராஜ்,
சென்னை-26

? எம்.எஸ்.வி. இசையில் நீராருங் கடலுடுத்த; ரஹ்மான் இசையில் செம்மொழி மாநாடு பாடல்... என்ன வித்தியாசம்?

! நீராருங் கடலுடுத்த - தமிழின் மாண்பைக் கம்பீரமாய் உயர்த்திப் பிடிக்கும் மோகன மெட்டு. செம்மொழி வாழ்த்துப் பாடல் மெட்டு - தமிழ் மண்ணைத் துறந்து ஓடுது தறிகெட்டு!

● பி.பத்மா, அரங்கநாதபுரம்

? தொலைக்காட்சித் தொடர்கள் பரப்பிவரும் குடும்பப் பிளவு சூழ்ச்சிகளும் கெடுமதிகளும் மிகக் கொடுமையாகி வருகின்றனவே... இதற்கு சென்சார் தேவை என்று பொறுப்புள்ள யாரும் சிந்திக்க மாட்டார்களா?

! சினிமாவுக்கு சென்சார் உள்ளதால் ஆபாசமும்

✱ நிழல் சிங்கம்



✱ அபாயகரமான...



✱ ...பட்டம்!

வன்முறையும் குறைந்துவிட்டனவா, என்ன? சென்சார் என்பது சில வழிகாட்டு நெறிகள் மட்டுமே. அந்த நெறிகளை எழுத்தளவில் கடைப்பிடித்து, கருத்தளவிலும் காட்சியளவிலும் மீறி ஏமாற்றுவது வழக்கமாகிவிட்டது. சின்னத் திரையிலும் அதுவே நிகழும். சமுதாய நோக்கில் சிந்தித்து, இவர்கள் சுயக்கட்டுப்பாட்டை மேற்கொண்டால்தான் உண்டு. அரசும் மக்களும் அத்தகைய சிந்தனையை ஊக்குவிக்க வேண்டும்.

● எ.டபிள்யூ ரபீ அஹமத், சிதம்பரம்

? தந்தைக்குச் சோறு போடவில்லை என்று

மகனைக் கைது செய்துள்ளார்களே.. இதனால் பெற்ற பிள்ளைகள் பெற்றோரைச் சரியாகக் கவனித்துக் கொள்வார்களா?

! பாசத்தை சட்டத்தின் மூலம் வற்புறுத்த முடியாது. குறைந்தபட்சம் பசி நீரப் பொருளாதாரப் பாதுகாப்பாவது கிடைக்கிறதே... அந்த மட்டில் ஆறுதல்தானே.

● என்.சீத்தாலட்சுமி, சென்னை-40

? ப.சிதம்பரம் ராகுல் காந்திக்கு, 'புரட்சித் தலைவர்' எனப் பட்டம் கொடுத்திருப்பது வியப்பாக இல்லையா?



✱ பறக்கும் கொடி...



✱ ...உறக்கும் தமிழ்!

! அவர் பட்டம் கொடுத்தது வியப்பில்லை. ராகுல் அதை ஏற்றால்தான் ரொம்ப வியப்பும் சோகமும் உண்டாகும். அவர் ஒரு வித்தியாசமான தலைவராக வருவார் என்ற நமது எதிர்பார்ப்பு தவிடுபொடியாகும்.

● எம்.ராஜேந்திரன், லால்குடி

? சிங்கம் படத்தில் நடிகர் சூர்யா சிறந்த போலீஸ் அதிகாரியாக நடித்ததற்காக, தமிழ்நாடு போலீஸ் அதிகாரிகளிடமிருந்து பாராட்டுதல் கிடைத்ததாமே?

! நிழலைப் பாராட்டுவது சுலபம். நிஜத்தில் சாதிப்பது கடினம். நமது காவல் துறையானது குற்றவாளிகள், சமூக விரோதிகளைக் கண்டு அஞ்சாமல் இருந்தால் மட்டும் போதாது. அரசியல் அழுத்தத்துக்கும் அஞ்சாமல் இருக்க வேண்டும். அப்போதுதான் போலீஸ் அதிகாரிகள் சிங்கமாக முடியும். அல்லாது போனால் பூனைதான்.

● ஜி.செல்வராஜன், விழுப்புரம் ✱

? ஜூன் 23-27 வரை உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாடு என விளம்பரப்படுத்தும் வேளையில், 'ஜூன்' என்றால் என்ன என்று நமது துவக்கப்பள்ளிச் சிறார்கள் கேட்கிறார்களே..?

! வடமொழியை ஒதுக்கப்போய் செம்மொழியைச் சிறைப்படுத்தும் அபத்த முயற்சி இது. ஸ்டாலினை அதே ஊடகங்கள் ச்டாலின் என எழுதவோ குறிப்பிடவோ துணியுமா?

● ஜி. ஜெயபாலன், மதுரை

? புதிய தலைமைச் செயலகக் கட்டடம் பாண்டிச்சேரி போலீஸ் தொப்பி போல உள்ளதாக ஜெயலலிதா கிண்டலடிக்கிறாரே?

! ஓஹோ! அதனால்தான், "கோட்டையில் அ.தி.மு.க. ஆட்சி மீண்டும் மலரும்" என்று சொன்னாரா? எம்.ஜி.ஆர். தொப்பி போல் இருந்திருந்தால், புதிய சட்டமன்ற வளாகத்தைப் புறக்கணிக்க எண்ணாமல் மகிழ்ந்து ஏற்றுக்கொண்டிருப்பார் போலும்!

❑ ரூ.150 பரிசு பெறுபவர்: பா.உதயகுமார், சென்னை-2

✱ ரூ.75 பரிசு பெறுபவர்: ஜி.செல்வராஜன், விழுப்புரம்

# கல்கி

இணைந்து வழங்கிய

Sri Palsani JEWELS

# கோடைக்கால கொண்டாட்டம்

## ஆறுவார அதிரடிப் போட்டி முடிவுகள்!

அசத்தலான ஆறுவாரப் போட்டிகளில் பங்கேற்று, ஆறுவாரப் போட்டிப் பக்கங்களையும் கத்தரித்து விடை எழுதி, ஒட்டுமொத்தமாக அவற்றை உரிய தேதிக்குள் மலையெனக் குவித்த வாசக நெஞ்சங்களுக்கு வணக்கம் பூசிய பாராட்டுக்கள்!

குவிந்த கடிதங்களில் சரியான விடை எழுதிய ஆறு நபர்களைக் குலுக்கல் முறையில் தேர்ந்தெடுத்தோம். கால் சவரன் பெறும் அந்த அதிர்ஷ்டசாலிகள்

1. எஸ்.உத்ரா, சென்னை
2. கல்யாணி பாலு, திருநெல்வேலி
3. கே.எஸ்.ஜெயக்குமார், தஞ்சாவூர்
4. டி.உமாதேவி, சேலம்
5. சி.லெட்சுமி, வேலூர்
6. சி.வசந்தா, திருச்சி

வந்த சரியான விடைகளோடு 'பல்சானி' என்ற இரு சொல் வரும்படி சிறந்த விளம்பர வாசகம் எழுதியவர்களில் 1 சவரன் சிறப்புப் பரிசு பெறுகிறார். அந்த மகா அதிர்ஷ்டசாலி...

தா.சு. ரவிக்குமார்,
கன்னியாகுமரி.

அவர் எழுதிய வாசகம்:

ஐஸ்வர்யம் பாரு!
பல்சானியில் ஆச்சர்யம் நூறு!
மனநிறைவைப் பாரு!
பல்சானி என்றென்றும் ஜோரு!



**போட்டியில் பங்கேற்றவர்களுக்கு நெஞ்சார்ந்த நன்றி!**

விடைகள் பக்கம் 85-ல் பார்க்க...




# காலை எழுந்தவுடன் சிரிப்பு!

மறுபடியும் நான் எழுத ஆரம்பிச்சிருக்கேன் - மறுபடியும்னு சொன்னதும் உங்க முகத்துல கேள்விக்குறி? எனக்குப் புரியுதுங்க. இதுக்கு முன்னாலே நான் என்ன எழுதியிருக்கேன்னு சந்தேகமா பார்க்குறீங்க - எத்தனை கவிதைகள், மகாகாவியங்கள், சிறுகதைகள் எட்ஸட்ரா...எட்ஸட்ரா. அதையெல்லாம் நீங்க இதுவரைக்கும் படிச்சதில்லைன்னு நெனைக்கும்போது நெஞ்சம் பொறுக்குதில்லையே..!

மூணாம் வகுப்பிலே இங்கிலீஷ் சொல்லிக்குடுக்குற ராஜலட்சுமி டீச்சர்தான், என் திறமையை மொத மொதல்ல விஞ்ஞானி மாதிரி கண்டு பிடிச்சாங்க. வீட்டுக் கணக்குப் புத்தகத்திலே நான் எழுதிய இங்கிலீஷ் பாடலைப் பார்த்துட்டு சிரிப்போடு சொன்னாங்க - 'வெ..ர்..ரி..குட்'! அந்தச் சொல்தான் எனக்கு கிடைச்ச முதல் பரிசு. 'எல்லோரும் கேளுங்க கவிதா இப்போ ரைம்ஸ் பாடப்போறா'- அப்படின்னு சொன்னதும் rain rain go away-come again another dayன்னு பாடி முடிச்சதும் டீச்சர் முகத்தைப் பார்த்தேன். "கவிதா, பாடற மாதிரி பாடினாதான் அது கவிதை புரியுதா?" என்று கேட்டு விட்டு எனக்கு இன்னொரு பரிசாக இன்னொரு சிரிப்பு. கவிதா யாருன்னு பார்க்கிறீங்களா! அட! நான்தாங்க. பெயரிலேயே கவிதை இருப்பதால, எனக்குக் கவிதை படக்படக்குன்னு வந்துச்சோ என்னமோ. அன்னியிலேர்ந்து எத்தனை கவிதை எழுதியிருக்கேன்னு எனக்கே எண்ணிப்பார்க்க முடியலே. என்னோட கவிதையிலிருந்து நாலு வரி எழுதி அம்மாவிடம் காண்பிச்சேன். அம்மா சொன்னாங்க... "முழுசா எழுதி சத்தம் போட்டுப் படி! அப்பா கேட்கட்டும்! அவருக்குப் பாரதியார் கவிதைன்னா ரொம்பப் பிடிக்கும்." நான் அப்படியே ஷாக் ஆயிட்டேன். என்னது பாரதியார் கவிதையா? என்னை மாதிரி வளர்ந்து வரும் கவிதாயினி கவிதைகள அவர் எப்படித் திருடினார்? பாத்தா மகான் மாதிரி இருக்காரே? ஆனா ஒண்ணு. இந்த ரகசியத்த இதுவரை யார் கிட்டேயும் சொல்லல. நீங்களும் உங்க மனசோட வெச்சிக்குங்க.

ஒரு தடவை, எனக்குப் பிடிச்ச பாட்டை ரசிக்க பூஜை அறையில பாடிக்கிட்டு இருந்தேன். கண்ணை மூடி ரசிச்ச பாட்டி, "எம்.எஸ் அம்மாவோட சரஸ்வதி கடாக்ஷம் நெறஞ்ச குரலும் லட்சுமி கடாக்ஷமான முகமும் இனி யாருக்கு

வரும் 'கமலாகுச சூகக குங்கு மதே - நயதாருணி தாருல..' ஆஹா!?'' என்றார். ஏன் என்னோட பாட்டை எம்.எஸ். திருடிப் பாடணும்? பாட்டிக்கூட இந்த விஷயத்தை சொல்லாம மறைச்சிட்டாங்க. பரவாயில்ல, பெரியவங்க செஞ்சா பெருமாள் செய்யறா மாதிரின்னு விட்டுக்



'ஏய் புள்ளே, பொட்டப்புள்ளன்னா ஒரு அடக்கம் சுருக்கம் வேண்டா..?' அப்படின்னாரு பாக்யராஜ் சார்!

கொடுத்துட்டேன். இப்படி விட்டுக் கொடுத்து விட்டுக் கொடுத்து வாழ்ந்து வரும் நேரத்துலதான், என் அக்கா நடிக்க வேண்டிய படத்துலே நான் நடிக்கும் படியா ஆயிடுச்சு. ஸ்கூல் படிப்பை விட்டுட்டு, வீட்டை விட்டுட்டுப் போக மனசே வரல. அம்மா சொன்னாங்க 'பெரிய கம்பெனி, நல்ல டைரக்டர். நீ படம் முழுக்க வருவ. அதிகபட்சமா பத்து நாள்தான்! ஓடிப்போய் ஓடி வந்திடலாம். முடியாதுன்னா தப்பா ஆயிடும்'. நானும் கோபிச்செட்டிப்பாளையம் போய் படப்பிடிப்புக் குழுவினரோடு தங்கினேன். மறுநாள் காலையிலே ஷூட்டிங். சாயங்காலம் மானேஜர் நாணி(நாராயணன்) வந்து சொன்னாரு 'ஏழு மணிக்கு எல்லோரும் டைரக்டர் ரூம்க்கு வரணும்'. ஏழு மணிக்கு யாரும் வந்து கூப்பிடல. நான் தயிர் சாதமும் தக்காளி சட்னியும் சாப்பிட்டுப் படுத்துட்டேன். என் ரூம்லே டி.வி கூட இல்லே. அப்பல்லாம் ஏழுவிருந்து ஏழரை வரைக்கும் ஒலியும் ஒளியும் அந்த பாட்டு போடுவாங்க. நல்லாயிருக்கும். இங்கே டி.வி இல்லாதது கூட வருத்தமில்லே... அம்மா, அக்கா ரெண்டு பேர், தம்பி ரெண்டு பேர், பாட்டி எல்லாரும் மத்தி மீன் அடுக்கி வெச்சா மாதிரி படுத்துத் தூங்குவோம். அத நெனச்சாதான் கஷ்டமா இருந்தது. எனக்குத் துணையா இருந்த சச்க அம்மா பக்கத்துலே படுத்துத் தூங்க ஆரம்பிச்ச போதுதான் பெல் சத்தம் கேட்டது. கதவைத் திறந்தா மேனேஜர். 'டைரக்டர் வெயிட் பண்றாரு வாங்க'-ன்னாரு.

அவசரமா எழுந்து போனோம். நிறையப் பேர் இருந்தாங்க. யாரையும் தெரியலே. பாக்கியராஜ் ஸார் சம்மணக்கால் போட்டுக்கிட்டு கட்டில் மேலே உட்கார்ந்திருந்தாரு. மத்தவங்கள்ளெல்லாம் கீழே தரையிலே. சார் என்னை எல்லோருக்கும் அறிமுகம் பண்ணி வெச்சாரு. அங்க இருந்த கேமிரா மேன் அசோக்குமார், அசிஸ்டெண்ட் விஜயலக்ஷ்மி, கே.கே.சௌந்தர், கோவை சரளா எல்லாருக்கும் வணக்கம் சொல்லி உட்கார்ந்துக்கிட்டேன். சார் கதை சொல்ல ஆரம்பிச்சாரு. என்னாலே தூக்கத்தைக் கட்டுப்படுத்த முடியலே. மெதுவா சச்க அம்மா தோள் மேலே சாஞ்சுக்கிட்டேன்.

# ஊர்வசி போட்டி சில்க் சாரி!



## மாதம் 3 புடைவைகள் பரிசு!

*வாசகர்களே!*

ஊர்வசி எழுதும் 'காலை எழுந்தவுடன் சிரிப்பு!' தொடரைத் தொடர்ந்து படிங்க... தொடரையொட்டி வாரம் ஒரு கேள்வி கேட்கப்படும்.

ஒவ்வொரு வாரமும் ஒரு கூப்பன் இடம்பெறும். விடைகள் மற்றும் உங்களின் பெயர் முகவரி ஆகியவற்றை அதிலேயே எழுதி இணைத்து மொத்தமாய் ஒவ்வொரு மாத இறுதியிலும் சேர்த்து அனுப்ப வேண்டும்.

சரியான விடை எழுதிய மூன்று வாசகர்கள் குலுக்கல் முறையில் தேர்ந் தெடுக்கப்பட்டு, அம்மாதத்துக்கான அதிர்ஷ்டசாலிகளாகப் புடைவைகள் பரிசு பெறுவார்கள். தொடரின் **இறுதியில் ஒரு மெகா பரிசும் உண்டு!**

ஜூலை மாத கூப்பன்களை இணைத்து அனுப்ப கடைசித் தேதி : 07.08.10

ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.

**அனுப்பவேண்டிய முகவரி:**

கல்கி பில்டிங்ஸ், 47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

பெயர் : ..............................................

முகவரி : ..............................................

..............................................

..............................................

..............................பின்கோடு:..................

தொலைபேசி : ..............................................

இ-மெயில் :

ஜூலை - 1

இரண்டாம் முறை ஊர்வசி தூங்கும்போது எழுப்பியது யார்?

*விடையை டிக் செய்யவும்*

- ☐ சக்கு அம்மா
- ☐ விஜயலட்சுமி
- ☐ பாக்யராஜ்
- ☐ நாராயணன்

பரிமளா ஐயர் பிள்ளை வயசுக்கு வந்துட்டாடானு ஸார் சொல்றது... எல்லாரும் சிரிக்கறது எங்கயோ கேக்கற மாதிரி இருக்கு. திடீர்னு ஒரு சைலண்ஸ். என்னது? ஒரு சத்தமும் காணோம்னு பாத்தா... சக்கு அம்மா என் தலையை ஸ்டேண்ட்ல வெச்சா மாதிரி நிமித்தி வெச்சாங்க. கஷ்டப்பட்டுக் கண்ணைத் தொறந்து பார்த்தேன். எல்லோரும் என்னையே பாத்துக்கிட்டு இருந்தாங்க. ஸார் முகத்துல கோபம்.. "யேய் புள்ள நீதான் கதாநாயகி! கதை சொல்றதுக்கு முன்னாடியே தூங்குறே! உன்ன

என் கிட்டயிருந்து பட்டத்தை வெடுக்குன்னு புடுங்கி மேலே விட்டு செந்தில் மாதிரி சிரிச்சாரு. எனக்கு விஷயம் புரியல. அப்புறம் அவரே சொன்னாரு "பரவாயில்லே... டக்னு முகத்துல எக்ஸ்பிரஷன் மாறுது... உன்னை நடிக்க வெக்கலாம்னு நம்பிக்கை வந்துடுச்சு. பயப்படாதே"ன்னார். பரிச்சயமில்லா நபர்கள், கூட்டம்... அசதி-களைப்பு. ரூம்ல சாப்பிடாமலே படுத்துட்டேன். திடீர்னு ஞாபகம் வந்துடுச்சு. வாரிச் சுருட்டி எழுந்து ஸார் ரூமுக்குப் போனேன். எனக்காக எல்லோரும் காத்திருந்தாங்க. விஜயலட்சுமி என்னைத் தன் பக்கத்தில் அமரச் செய்தாள். ஒரே ஒரு பகலில் நாங்க நண்பிகளாயிட்டோம். (இன்னும் அது தொடர்கிறது). ஸார் கதை சொல்லச் சொல்ல...நான்

**'கவிதா... கவிதா... தூங்காத எழுந்துரு'ன்னு சொல்ல, கஷ்டப்பட்டு கண்ணத்தொறக்க முயற்சி பண்ணேன்.**



வெச்சு எண்பது நாள் ஷூட்டிங் பண்ணியாகணும். இன்னிக்கு மொதநாள்; அதனால விடறேன். போ... போய்த் தூங்கு"ன்னாரு. ஓடி வந்துட்டேன். காலைல ஷூட்டிங்... காருக்குள்ளே உட்கார்ந்து இருந்தேன்... எல்லோரும் நல்லா தூங்கினியான்னு கேட்டாங்க... உம்முன்னேன். திடீர்னு பாக்கியராஜ் ஸார் முன்னால சீட்ல வந்து உட்காந்தாரு. மெதுவா என்னைத் திரும்பிப் பார்த்தாரு. 'ஏய் புள்ளே, பொட்ட புள்ளேன்னா ஒரு அடக்கம் சுருக்கம் வேண்டாம்' அப்படின்னாரு. நான் திடுக்கிட்டு தாவணிய சரி செஞ்சேன். ஏதாவது தப்பு பண்ணிட்டோமோ? மனசு படபடன்னுச்சு. ஸார் கலகலன்னு சிரிச்சாரு.

இப்போ திடமா தெளிவா கேட்டுக்கிட்டு இருந்தேன்.. அப்பா அடிப்பது, பரிமளா அழுவது, அப்பா போனதும் காலில் வாழைப் பட்டையைக் கட்டிக் கொண்டு தான் அடி வாங்கினாள் என்று establish செய்வது என்று சொல்லிக்கொண்டே செல்ல.. விஜயலட்சுமி, "கவிதா கவிதா தூங்காதே எழுந்திருன்னு" சொல்ல... கஷ்டப்பட்டுக் கண்ணைத் தொறக்க முயற்சிப் பண்ணேன்... முடியலே. ஸார் குரல் மட்டும் கேட்டது, 'கூட்டிட்டுப் போய் தூங்க வைம்மா'ன்னு சொன்னது. கண்ணைத் தொறந்து நன்றியோடு சிரிச்சேன். அவர் முறைக்க, விறுவிறுன்னு அறைக்கு வந்தேன்... எதுக்கு? தூங்கத்தான்...

**(தொடரும்)**

# படாத பாடுபடும் ரூபாய்!



அமெரிக்க டாலருக்கும் ஐரோப்பிய யூரோவுக்கும் பவுண்டுக்கும் இருக்கும் குறியீடுகள் உங்களுக்குத் தெரியும். இந்திய ரூபாய்க்கு அதுபோல் ஒரு குறியீட்டை எங்காவது பார்த்திருக்கிறீர்களா? இதுவரை இல்லை. இனிமேல் உண்டு.

ஆங்கிலத்தில் இந்திய ரூபாயைக் குறிக்க Rs. என்று எழுது கிறோம். இதையேதான் பாகிஸ்தான், நேபாளம், இலங்கை ஆகிய நாடுகளும் பயன்படுத்துகின்றன. உலகிலேயே இரண்டாவது பெரிய ஜனநாயக நாடான நமக்கு, தனித்துவமான ரூபாய்க் குறியீடு இல்லை என்பது ஆச்சரியம்!

இந்தக் குறையைப் போக்கச் சென்ற ஆண்டு பட்ஜெட் உரையில் பிரணாப் முகர்ஜி இந்திய ரூபாய்க்கான ஒரு தனித்துவமான குறியீட்டை உருவாக்கும் அறிவிப்பைச் செய்தார். அதைத் தொடர்ந்து தேசிய அளவில் குறியீட்டை வடிவமைக்கும் போட்டி அறிவிக் கப்பட்டது. கிட்டத்தட்ட 36,000 வடிவங்கள் வந்துசேர்ந்தனவாம்! அதில் இருந்து இறுதிச் சுற்றுக்கு வந்த ஐந்து வடிவங்களைத்தான் பக்கத்தில் உள்ள படத்தில் பார்க் கிறீர்கள்.



இது இந்தி எழுத்து ''ரா''வை ஒட்டி வடிவ மைக்கப்பட்டிருக்கும் ரூபாய்க்கான வடிவம். ஐந்து வடிவங்களில் இருந்து ஒரு வடி வத்தை மத்திய அமைச்சரவை இறுதி செய்யும். அப்படித் தேர்வு பெறும் வடி வத்துக்கு ரூ. 2.5 லட்சம் பரிசும் உண்டு!

இறுதிச் சுற்றுக்கு வந்துள்ள ஐந்து வடிவங்களைப் பற்றிய நிறைய விமர்சனங் களும் இருக்கின்றன. எதற்கு இந்தி 'ரா' வை வைக்கவேண்டும்? இந்தியை மீண்டும் திணிக்கிறார்களா? டாக்டர்கள் எழுதும் பிரிஸ்கிரிப்ஷன் குறியீடு போல் இருக்கிறதே என்று சந்தேகம் கிளப்புகிறவர்களும் இருக்கிறார்கள்.

ரூபாய்க்கான ஒரு குறியீடு தேர்வு பெற்ற பின்புதான் இருக்கிறது உண்மையான சவால். எல்லா கம்ப்யூட்டர் பலகைகளிலும் இந்தக் குறியீட்டைக் கொண்டு வரவேண்டும். இனி அச்சடிக்கப்படும் ரூபாய் நோட்டுகளில் எல்லாம் இக்குறியீட்டைச் சேர்க்கவேண்டும். அதை மக்களிடம் பிரபலப்படுத்தியாக வேண்டும்.

உண்மையில் ரூபாய் படாத பாடு படப்போகிறது!

- ஆர்.வெங்கடேஷ்



# கல்கி



2010 ஜூலை 11
விக்ருதி ஆனி 27
மலர் : 68
இதழ் : 50

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்

## அமைதிப் பூங்கா அல்ல; வன்முறை வனம்!

**பழ.**கருப்பையா மீது நிகழ்த்தப்பட்ட தாக்குதல், தமிழக அரசியலில் வேர்கொண்டுள்ள வன்முறை கலாசாரத்தின் சாட்சியம். நமது மாநிலத்தில் சட்டம் ஒழுங்கு தகர்ந்து போயிருப்பதற்கு ஓர் எடுத்துக்காட்டு.

ஆட்சியில் உள்ளவர்களைக் கடுமையாக விமர்சித்து வருபவர் கருப்பையா. அவரது சில விமர்சனங்கள் மிதமிஞ்சியும் கூட அமைந்ததுண்டு. ஆனால், அதனை ஜனநாயக ரீதியில் சுட்டிக் காட்ட, கண்டனம் செய்ய வழிகள் உள்ளன. அதைத் தவிர்த்து, எக்காரணம் கொண்டும் அனுமதிக்கத் தகாத வகையில் அவர் தாக்கப்பட்டிருப்பது, அதிர்ச்சி அளிக்கிறது. தமிழகத்தின் எதிர்காலம் பற்றிய கவலையையும் ஏற்படுத்துகிறது.

உள்துறை, தமிழக முதல்வரின் மேற்பார்வையில் இருக்கிறது. ஆயினும், இத்தாக்குதல் குறித்து முதல்வர் இதுவரை வருத்தம் தெரிவிக்கவில்லை. அதிர்ச்சி வெளிப்படுத்தவில்லை. ஓர் அறிக்கைகூட வெளியிடவில்லை.

இந்த மௌனத்தைப் பார்க்கிறபோது, விமர்சனங்களை ஏற்கும் பக்குவமும், அவற்றை ஆராய்ந்து செயல்படும் முதிர்ச்சியும், தார்மிக நெறிகளும் அரசியல் வட்டாரங்களில் காணாமல் போய்விட்டதாகவே தோன்றுகிறது.

மற்றொரு அரசியல் விமர்சகர் தமிழருவி மணியன். இவரை வீட்டு வசதி வாரியக் குடியிருப்பிலிருந்து வெளியேற்ற, முறை




யற்ற நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளன! அவர் நீதிமன்றத்தை நாட, அவருக்குச் சாதகமாக வழங்கிய தீர்ப்பில், அரசின் பழிவாங்கும் போக்கைக் கண்டித்திருக்கிறார் நீதிபதி.

அரசு தரப்பே இவ்வாறு நடந்துகொள்ளும்போது, கட்சி மட்டத்தில் உள்ளவர்களின் முறைகேடுகளுக்கு உரிமம் வழங்கப்பட்டுவிடுகிறது. பழ.கருப்பையா வீட்டில் நடந்தது போன்ற வன்முறைத் தாக்குதல்கள் நடக்கின்றன.

"வன்முறையில் ஈடுபடுவோரைக் கட்சியிலிருந்து நீக்கி விடுவோம்," என்று தலைமை திட்டவட்டமாக அறிவித்து, செயல்படுத்தினாலன்றி இந்த அராஜகம் அடங்காது.

ஆனால், கட்சி முக்கியஸ்தர்கள் சம்பந்தப்பட்ட கொலை வழக்குகளே இங்கே தீர்வு காணப்படாமல், கிடப்பில் போடப்படுகின்றன அல்லது செல்வாக்கு காரணமாக வாபஸ் பெறப்படுகின்றன; அல்லது நீர்த்துப்போக அனுமதிக்கப்படுகின்றன.

அரசியல் காரணங்களுக்காக அளிக்கப்படும் வன்முறை உரிமம், சமூக விரோதிகளையும் பலப்படுத்துகிறது. அவர்களைத் தட்டிக் கேட்கும் தார்மிகப் பலம் காவல் துறைக்கு இல்லாமல் போய்விடுகிறது. இது தொடர்ந்து அனுமதிக்கப்பட்டால், ரௌடிகளின் ராஜ்யம் விரைந்து வளர்ந்து, அதுவே ஓர் அதிகார மையமாகிவிடும்.

அப்போது, இந்தப் போக்கை அனுமதித்தும் ஊக்குவித்தும் ஆட்சியில் நீடிப்போர் உள்பட, அனைவருக்குமே இதனால் அபாயம்தான்.

மூத்த தலைவரும் பழுத்த அரசியல் அனுபவம் படைத்தவருமான முதல்வர், தமது கட்சி மட்டத்தில் களையெடுப்பதைத் தொடங்கட்டும். வன்முறையைக் கைகொள்வோரைக் கடுமையாக எச்சரித்து, காவல் துறையின் சீரிய செயல்பாடுக்கு வழி வகுக்கட்டும். இன்று தமிழகத்தின் முதல் தேவை இந்த நடவடிக்கையே! ●

# கவிதை கஃபே!

## மனைவி

என்றோ ஒருநாள்
நான் ஆழ்குளத்தில்
எறிந்த கல்லைத்
தேடிப் பிடித்து
எடுத்து வந்து
என் முன் நீட்டுகிறாய் நீ!
பாசிபடிந்த அக்கல்லில்
வழுக்கி விழுகிறேன் நான்..!

- ஆதலையூர் சூர்யகுமார்

## காலம்

நான் ஓடுகிறேன்
இல்லை
பறக்கிறேன் என்று
குற்றம் சொல்கிறார்கள்...
எதிலும் என்னை
வீணே குற்றம் காண்பவர்கள்
நான் நிலைத்து நிற்பதும்
உண்டு
சில மீளாச் சோகங்களில்...

- கவிதா

கூட்டம் கலைவதே இல்லை
யார் பேசினாலும்...
சுடுகாட்டில்...!

- கலை இலக்கியா

## கிழிசல்

தாறுமாறாய் நீர் கிழித்து
நீந்தும் மீன்கள்...
கால்களால் அக்கிழிசல்
தைத்தபடி
மிதக்கும் வாத்துகள்...!

- தனலெட்சுமி பாஸ்கரன்

## வாசகர்களே!

இது உங்க கவிதை காலனி!
உங்க சின்னச் சின்னக் கவிதைகளைச் சீக்கிரமா
'கவிதை கஃபே'ன்னு குறிப்பிட்டு அனுப்புங்க...
kalki@kalkiweekly.comக்கும் அனுப்பலாம்



# மிளகா



குவாலிஸ் கார்கள், வெள்ளை வேட்டி-சட்டை மனிதர்கள், அரிவாள், ரத்தம் என மதுரையைக் குறித்து வெளிவந்து கொண்டிருக்கும் படங்களின் லிஸ்ட்டில் மற்றுமொரு படம் 'மிளகா'. மதுரக்கார பயலுக நட்புக்காக உயிரையும் கொடுப்பாங்க'' என்று சப்-டைட்டில் போடுகிறார்கள். அதோடு அவங்களுக்குப் பிடிக்கலைன்னா போட்டுத் தள்ளிடுவாய்ங்க'' என்று இன்னொரு டைட்டிலையும் காண்பித்திருக்கலாம். அந்தளவுக்கு அரிவாளோடு அலைகிறார்கள்.

மதுரையின் ரவுடிக் கும்பல் சகோதரர்களில் ஒருவர் ரவிமரியா. ஊர்த் திருவிழாவில், ஹீரோ நட்ராஜ், ஹீரோ யினிடம் செய்யும் சீண்டலுக்காகத் தவறுதலாக, ஹீரோயின் பூங்கொடி ரவிமரியாவை அடித்து விடுகிறார். அடித்த பெண்ணையே திருமணம் செய்ய வேண்டும் என்ற அரதப்பழசான தமிழ்ச் சினிமா ஃபார்முலாவுக்கு ஏற்ப கதாநாயகியைத் திருமணம் செய்யச் சபதம் செய்கிறார். தப்பித்து ஓடும் பூங்கொடியைத் துரத்தும்போது, எதிர்பாராத விபத்தில் மனநிலை பாதிக்கப்படுகிறார் ரவிமரியா. அதற்காகப் பூங்கொடியை வீட்டுச் சிறை வைத்து விடுகிறார்கள் அவரது வில்லன் சகோதரர்கள்.

மிளகா வற்றல் மண்டி வைத்திருக்கும் ஹீரோ நட்ராஜ், பூங்கொடியின் பிரச்னையைத் தீர்த்து எப்படி வில்லன்களிடமிருந்து மீட்டுத் திருமணம் செய்கிறார் என்பதுதான் கதை.

பாடிலாங்குவேஜ், துருதுரு மூவ்மெண்ட், மதுரைத் தமிழ் என வரும் நட்ராஜுக்கு ஆக்ஷன் நன்றாக வருகிறது. முயற்சித்தால் முன்னணித் தமிழ் ஹீரோவாக வர வாய்ப்புண்டு.

வில்லன்களிடம் மாட்டிக் கொண்டு தவிக்கும் போதும், பிரச்சனையை நட்ராஜிடம் சொல்ல முயற்சித்து அது முடியாமல் போகும் போது வரும் பரிதவிப்பிலும் நமது பக்கத்து வீட்டுப் பெண்ணைப் போன்று மனத்தில் ஒட்டிக் கொள்கிறார் பூங்கொடி. இவர்களோடு கவனிக்கப்பட வேண்டியவர் இயக்குநர் ரவிமரியா. வில்லனாகவும், மனநிலை பாதித்த நபராகவும் தமது கேரக்டரைச் சரியாகச் செய்திருக்கிறார்.

நகைச்சுவையில் வடிவேலு, விவேக் ரேஞ்சுக்கு சிங்கம்புலி மாறுவார் போல. இசை சபேஷ்-முரளி. பழைய டியூன் சாயலில் பாட்டுகளைப் போட்டு ஒப்பேத்தியிருக்கிறார்கள். இத்தனை அடிதடிகள் நடக்கும்போது, காவல் துறை எங்கே போனது என்ற கேள்வி வழக்கம் போல எழும்தான்!.

மிளகா - ஓவர் காரம்.

- ராகவ்குமார்

# அபிஷேக்கை

• மணிரத்னம்

**எல்லாருக்கும் தெரிஞ்ச ராமாயணத்தைப் படமா எடுக்கும் துணிச்சல் எப்படி வந்தது?**

''எந்தக் காலத்திலோ எழுதப்பட்ட ராமாயணம் இன்றைய சூழ்நிலைக்கும் பொருத்தமா இருக்கு என்பது ரொம்ப ஆச்சரியம். ராவணனுக்கு பத்து தலைன்னு எப்படி யோசிச்சாங்க? அதன் மூலமா என்ன சொல்ல வந்தாங்க? அந்தப் பத்து தலைங்கறது என்ன? பத்து குரலா? பத்துவிதமான சிந்தனையா? மனோதத்துவ டாக்டர்கள் சொல்லுகிற 'மல்டிபின் பர்சனாலிடி டிஸ்ஆர்டர்' கொண்டவனா? அவன்கிட்டே நெருங்கிப் போனால், அவனுடைய கோணத்திலிருந்து என்ன தெரியுது? இன்னிக்கு அந்த ராவணன் இருக்கானா? இருந்திருந்தால் எப்படி இருப்பான்? இப்படியெல்லாம் யோசிச்சபோது வந்த ஐடியா தான் படம். ரொம்ப நாளாவே இந்த ஐடியா என் மனசில இருந்தது.''

**நீங்க மகாபாரதக் கர்ணனை வெச்சு தளபதி எடுத்ததற்கும், ராமாயணத்தை வெச்சு ராவணன் எடுத்ததற்கும் என்ன வித்தியாசம்?**

''கர்ணனோட வாழ்க்கை ரொம்ப அபூர்வமானது. அனாதையாக விடப்பட்ட குழந்தை, எதிர் தரப்பினரால எடுத்து வளர்க்கப்பட்டு, அவர்களுக்காகத் தன் சகோதரர்களுடனே மோதும் கேரக்டர். அதிலே டிராமாட்டிக் விஷயங்கள் நிறைய உண்டு. அவற்றையெல்லாம் திரைக்குக் கொண்டு வந்தேன். ஆனால் இங்கே, அதற்கு நேரெதிர். சீதையைக் கடத்தும் எமோஷனலான இடத்திலிருந்து ஆரம்பித்து, சீதையை மீட்பது, ராவணனைக் கொல்வது வரை மட்டும் எடுத்துக் கொண்டேன். ராவணனை வேறு ஒரு கோணத்திலே இருந்து காட்டி இருக்கேன்.''

**ஏதாவது தற்கால நிகழ்வு ஒன்றைப் பின்னணியாக வைத்துத் தொடர்ந்து படமெடுக்க என்ன காரணம்?**

''என்னைச் சுற்றி நடப்பதை வைத்துக் கதையாக்கிப் படமெடுப்பது எனக்குச் சுலபமா இருக்கு. அதனால, எந்த சப்ஜெக்ட்டை எடுத்துக்கிட்டாலும்,

# விட விக்ரம் நடிப்பு சூப்பர்?

அதை இன்றைய சூழ்நிலைக்கு என்னால கொண்டுவர முடியுது. அதை மக்களும் ரசிப்பாங்க.''

**அபிஷேக்கை விட விக்ரம்தானே ரொம்ப நல்லா நடிச்சிருக்காரு? சில இடங்களில் அபிஷேக் முகத்தில் முரட்டுத்தனத்தை மீறி ஒரு சாஃப்ட்னஸ் தெரிகிறதே?**

''ரெண்டு பேரும் வெவ்வேறு ஸ்ருதி. ரெண்டு பேரும் தங்களுக்குரிய ஸ்ருதியில் நடிச்சிருக்காங்க. அவங்களுக்குள்ள இருக்கிற பெஸ்ட் நடிப்பை வெளியில கொடுத்திருக்காங்க. ரெண்டு பேரோட நடிப்பிலேயும் எனக்கு சந்தோஷம்; திருப்தி.''

**அழகு: அதையும் மீறி முகத்துல ஆழமான சோகம். ஐஸ்வர்யா ராயை எப்படி இவ்வளவு பிரமாதமா நடிக்க வெச்சீங்க?**

''முதல்ல டைரக்டருக்கு, ஆர்ட்டிஸ்ட் மேல முழுநம்பிக்கை வேணும். ஆர்ட்டிஸ்ட்டுக்கு, டைரக்டர் மேல முழு நம்பிக்கை வேணும்; படத்துல கேரக்டர் என்ன என்பதை நான் எழுதிக் கொடுத்து, அதை அவங்க உள்வாங்கி, அவங்க கிட்டே இருந்து வெளியில வந்ததால், அது சரியா இருந்தது. டைரக்டரும், ஆர்ட்டிஸ்ட்டும் கைகோர்த்து அந்த கேரக்டரை அழைச்சுக்கிட்டுப் போனோம்.





* அபிஷேக்



* விக்ரம்

**தேசிய விருது கிடைக்கும்னு எதிர் பார்க்கறீங்களா?**

''நான் எப்போதுமே ஒரு படம் எடுக்கிறபோது, அந்த மாதிரி யோசிச்சு எடுக்கறதில்லை.''

சந்திப்பு: **எஸ்.சந்திரமௌலி**

**மணி ரத்னம்**

# ஃபிரிட்ஜ் சாப்பாடு வேணாம்!?



* விஜய் சி.போஸ்

**நா**ற்பத்தைந்து வயதை எட்டிய வசந்திக்கு ஒரு கிலோ மீட்டர் நடந்து மார்க்கெட்டுக்குப் போய் வந்தாலே சுருக் சுருக் என மூட்டில் அப்படி ஒரு வலி. சரி, ரொம்ப தூரம் நடந்துட்டோம் போலிருக்கு, நடையைக் கொஞ்சம் குறைப்போம் எனச் சரியாக இருநூறு அடியில் உள்ள பக்கத்துக் கடைக்குப் போய் விட்டு வந்தபோதும், விடாமல் தொடர்ந்தது அதே மூட்டுவலி. தனக்கு வந்திருப்பது மூட்டுத் தேய்மானம் என்பதை வசந்தி அறிந்து கொள்ளவே பல வாரங்கள் ஆகி விட்டன.

இந்த மூட்டுத் தேய்மானம் ஏன் வருகிறது? எதற்கு வருகிறது? எப்படி வருகிறது என்ற அடுக்கடுக்கான வினாக்களோடு சென்னை அப்போலோ மருத்துவமனையின் மூட்டு அறுவைச் சிகிச்சை நிபுணர் டாக்டர் விஜய் சி. போஸ் அவர்களிடம் சென்ற போது...

"மூட்டுத் தேய்மானம் வருவதற்கான காரணங்கள் மூன்று. முதல் காரணம், நமது வாழ்க்கை முறை. அது முற்றிலுமாக மாறி விட்டது. ஏதேதோ நேரத்துக்குச் சாப்பிடுவது, தூங்குவதில் ஆரம்பித்து எல்லாமே தலைகீழாகிப் போன தன் விளைவு, மூட்டுத் தேய்மானத்தில் தெரிகிறது. அந்தக் காலத்தில் 65, 75 வயதுக்கு மேற்பட்டவர்களுக்கு ஏற்பட்ட மூட்டுத் தேய்மானம் என்பது, இக் காலத்தில் 40, 45 வயதை எட்டியவர்களிடமே எட்டிப் பார்க்க ஆரம்பித்து விட்டது.

மூட்டுத் தேய்மானத்துக்கான அடுத்த காரணம், உடற்பருமன். உடல் பருமனாக உள்ளவர்களுக்கு மூட்டுத் தேய்மானம் ஏற்பட்டால், அந்த மூட்டு வலி என்பதும் அதிகமாகவே இருக்கும். அடுத்து, சரிவிகித உணவு என்பதே இல்லை. சரிவிகித உணவு என்றால் என்ன? என அப்பாவியாய்க் கேள்வி எழுப்புவோர் இன்னமும் இருக்கிறார்கள்! எல்லா வேளைகளிலும் அரிசி உணவே உண்பது அல்லது அடிக்கடி ஹோட்டல்களில் சென்று சாப்பிடுவது. இன்னும் மேலே, மூன்று, நான்கு நாட்கள் ஃபிரிட்ஜில் வைத்த உணவுப் பொருளைச் சாப்பிடுவது - இவை எல்லாமே மூட்டுத் தேய்மானத்தைச் சுலபமாக ஏற்படுத்திவிடும்.

முடிவான காரணம், உடற்பயிற்சியின்மை. இதற்கு நாம் சொல்லும் சாக்கு நேரமின்மை.



உடற்பயிற்சி என்பதைத் தினமும் அரை மணி நேரமாவது செய்து வந்தால்தான் நம் மூட்டு வலுபெற்றிருக்கும். ஏன் எதற்கு எப்படி என்ற கேள்விகளுக்கான காரணங்கள் மேலே குறிப்பிட்டவைதான்.

**'மூட்டு (knee) replacement அறுவை சிகிச்சை என்பது என்ன?'**

தேய்ந்த மூட்டை அறுவைச் சிகிச்சை

**மூன்று, நான்கு நாட்கள் ஃப்ரிட்ஜில் வைத்த உணவுப் பொருளைச் சாப்பிடுவது மூட்டுத் தேய்மானத்தைச் சுலபமாக ஏற்படுத்திவிடும்.**

மூலம் சரி செய்வதுதான் knee replacement. *10, 15* வருடங்களுக்கு முன், இந்த அறுவைச் சிகிச்சை என்பது கடினமான ஒன்றாக இருந்தது. அறுவைச் சிகிச்சை செய்து கொண்ட பின்னரும், மாடிப் படிகளில் ஏறி இறங்குவது கஷ்டமாக இருந்தது. ஆனால், ஐந்து வருடங்களாக மருத்துவ உலகின் நவீன வளர்ச்சியால், இந்த அறுவைச் சிகிச்சை சுலபமாகி விட்டது.

**சிக்குன்குனியாவும், மூட்டு வலியும் இரட்டையர்கள் போல ஒட்டியே வருகின்றனவே ஏன்?**

''ஆம். சிக்குன்குனியாவுக்கும், அதனால் ஏற்படக்கூடிய மூட்டுவலிக்கும் முழுமையான தீர்வு என்பது மருத்துவ உலகில் கண்டுபிடிக்கப்படவில்லை. சிக்குன்குனியா வைரஸால் பாதிக்கப் பட்டவர்களுக்கு, மூட்டுவலி என்பது கட்டாயம் இருக்கும். வலியைக் குறைக்கத் தான் மாத்திரைகள் இருக்கிறதே தவிர, வலியை முற்றிலுமாகத் துரத்த இல்லை என்பது ஒரு வருந்தத்தக்க உண்மை'' என்கிறார் டாக்டர் விஜய் சி.போஸ்.

**- நளினி சம்பத்குமார்**

# சாய்னாவுக்கு வரும் காதல் கடிதங்கள்!

ச.ந.கண்ணன்

மூன்று வாரங்களில் மூன்று பெரிய போட்டிகளை வென்று, மீண்டும் இன்னொருமுறை தலைப்புச் செய்திகளில் இடம்பிடித்திருக்கிறார் சாய்னா நேவால். இதற்கு முன்னால் உலக அரங்கில் இந்தியாவின் கொடியை உயர்த்தியவர் பி.டி. உஷா. அதற்குப் பிறகு பளு தூக்கும் வீராங்கனை கர்ணம் மல்லேஸ்வரியும் குத்துச்சண்டை வீராங்கனை மேரி கோமும் செல்லுமிடமெல்லாம் இந்தியாவின் மங்களம் பாடினார்கள். இப்போது, சாய்னாவின் தயவால் பேட்மிண்டன் வட்டாரத்தில் இந்தியாவுக்குத் தனி அந்தஸ்து கிடைத்திருக்கிறது. சாய்னாவின் மிகப்பெரிய சிறப்பு, எந்தச் சர்ச்சையிலும் சிக்காதது. தம் கவனத்தை விளையாட்டில் மட்டுமே செலுத்துவது. அவரது வெற்றிகளைத் தவிர வேறு எந்தச் செய்திகளுமே வெளியே வந்தது கிடையாது. இப்படி எல்லாம் கட்டுப்பாடாக இருந்ததினால், இப்போது தரவரிசைப் பட்டியலில் மூன்றாவது இடத்துக்கு முன்னேறியிருக்கிறார் சாய்னா.

இளம் பிராயத்துக் கனவுகள்மீது சாய்னாவுக்கு ஆசையில்லையா என்றால், "எனக்கும் மற்றவர்கள் என் அழகை புகழவேண்டும், என் தோழிகளுடன் வெளியே செல்லவேண்டும் என்ற ஆசைகள் இருந்தது உண்மைதான். ஆனால், இப்போது அந்த எண்ணங்கள் துளிக்கூட இல்லை. என் கவனம் முழுக்க விளையாட்டின்மீது



தான். நேரம் செலவிடமுடியாததால் எனக்கு இப்போது தோழிகள் என்று யாரும் இல்லை. அதனால் என்ன, என்னைப் பார்த்து பலபேர் பேட்மிண்டன் விளையாட ஆரம்பித்திருக்கிறார்கள். இதைவிட, வேறு என்ன சுகம் வேண்டும்?'' என்கிறார் சாய்னா. ஆரம்பத்தில் சைவப்பட்சியாக இருந்த சாய்னா பிற்பாடு அசைவ உணவுக்கு மாறிவிட்டார். 'சீனப் பெண்கள் அசைவம் உண்பதால்தான் பலத்துடன் இருப்பதாக எனக்குச் சொல்லப் பட்டது. அதனால் என் உணவுப் பழகத்தை அசைவத்துக்கு மாற்றிக் கொண்டுவிட்டேன். இப்போது நானும் பலமாகிவிட்டதுபோல உணர்கிறேன்' என்று சொல்லும் சாய்னாவுக்கு நிறையக் காதல் கடிதங்கள் இமெயில் வழியாக வருகின்றன. ஆனால் ஒருவர்கூடப் பேர், ஊர் பற்றி எதுவும் எழுதுவதில்லை. 'என்னைப் பிடிக்கும் என்பதற்காக அவர்கள் பேட்மிண்டன் ரசிகர் களானால் எனக்குச் சந்தோஷம்தான்' என்று சொல்லிச் சிரிக்கிறார்.



அந்த நண்பருக்கு அலுவலகம் ஜெமினி மேம்பாலம் அருகில். வீடு வளசரவாக்கம். "நான்கைந்து வருடங்களுக்கு முன்பு வரை கூட, வீட்டிலிருந்து காரில் அலுவலகம் செல்ல அதிக பட்சம் அரை மணி ஆகும். ஆனால், இப்போது குறைந்தது ஐம்பது நிமிடங்களாகின்றன. மழை பெய்து விட்டால் இன்னும் மோசம். சமயத்தில் இரண்டு மணி நேரம் கூடத் தாமதமாகும்" என்கிறார் ராமநாராயணன் என்ற அந்த நண்பர்.

பத்து கி.மீ. வேகத்துக்கு மேல் போக முடியாதபடி வாகன நெருக்கடி. காலை, மாலை வேளைகளில் ஜெமினி முனையிலிருந்து, போரூர் சந்திப்பு வரை வாகனங்கள் ஊர்ந்தே செல்கின்றன. இந்தப் பகுதி மட்டுமல்ல; சென்னையின் பெரும்பாலான சாலைகளில் போக்குவரத்து நெருக்கடி. அலுவலகம் கிளம்புவோர் மிகவும் முன்கூட்டியே கிளம்ப வேண்டியதாக இருக்கிறது. குறித்த நேரத்தில் ரயிலைப் பிடிக்க முடியாதவர்கள் நிறையப் பேர். போக்குவரத்து நெருக்கடிக்கு ஒரு காலத்தில் கொல்கத்தாவை உதாரணம் சொல்வார்கள். சென்னை, இப்போது அதைத் தூக்கிச் சாப்பிட்டுவிட்டது.

அறுபது லட்சம் மக்கள் தொகை கொண்ட சென்னை நகருக்கு, சுற்று மாவட்டங்களிலிருந்து தினமும் பத்து லட்சம் பேர் வந்து போகிறார்கள். 1995-ல் சைக்கிளைத் தவிர மற்ற வாகனங்களின் மொத்த எண்ணிக்கை ஏழு லட்சம். இன்று அதுவே முப்பது லட்சம். நகரில் ஐம்பதாயிரமாக இருந்த கார்களின் எண்ணிக்கை பத்தாண்டுகளில் மூன்று லட்சமாக உயர்ந்திருக்கிறது.

தமிழகத்தில் மட்டும் மொத்தம் பத்து லட்சத்துக்கும் மேல் கார்கள் இருக்கின்றன. இதில்லாமல் ஜீப், வாடகைக் கார்கள் தனி. வருடத்துக்கு முப்பதாயிரம் கார்கள் கூடுவதாக ஒரு புள்ளி விவரம் சொல்கிறது. சாலையில் நெருக்கடிக்கு மற்றொரு காரணம் பெருகி விட்ட இரு சக்கர வாகனங்கள். 31.03.2010 கணக்குப்படி, தமிழகத்தில் ஐம்பத்தோரு லட்சம் மோட்டார் பைக்குகள், பதிமூன்று லட்சம் ஸ்கூட்டர்கள், முப்பத்தைந்து லட்சம் மொபெட்கள் இருக்கின்றன. தமிழகத்தில் ஓடும் ஆட்டோ ரிக்ஷாக்களின் எண்ணிக்கை மட்டும் 1.6 லட்சம். இவை தவிர லாரிகளின் எண்ணிக்கை தனி.



# மூச்சுத் திணறும்

சி.எம்.டி.ஏ. எனப்படும் சென்னைப் பெருநகர வளர்ச்சிக் குழுமம், தனது இரண்டாவது மாஸ்டர் பிளானில் பார்க்கிங்குக்காக நல்ல விதிமுறைகளை அறிமுகப்படுத்தியிருக்கிறது. ஆனால், அதை அமுல்படுத்தத் தயங்குகிறது. இப்போதே கூட வணிக வளாகங்கள்,

# சாட்டிலைட் நகரங்கள் வேண்டும்!

"சென்னை மக்கள் ஆடம்பர வாழ்க்கைக்குப் பணம் செலவழிக்கத் தயங்குவார்கள் என்ற இமேஜ் மாறிவிட்டது" என்கிறார் எம்.பி.எல்.ஃபோர்டு கார் விற்பனை நிறுவனத்தின் கூடுதல் பொது மேலாளர் தேவேந்திரன். "கிடுகிடு பொருளாதார வளர்ச்சி, கை நிறையச் சம்பளம். படித்து நல்ல வேலையில் இருக்கும் நடுத்தர மக்கள் பெருகியுள்ளார்கள். அதனால் கார் விற்பனை ஓஹோவென்று உயர்ந்துவிட்டது. சென்னையிலேயே நான்கு கார் தயாரிப்பு நிறுவனங்கள் இருப்பதால், மற்ற நகரங்களை விட விலை குறைவு. வரும் காலங்களில் எண்ணிக்கை இன்னமும் எக்ஸ்பிரஸ் வேகத்தில் உயரும். எனவே, நகரிலிருந்து பிரிந்து வெளியே செல்லும் தேசிய நெடுஞ்சாலைகளில் 80 கி.மீ. தள்ளி சாட்டிலைட் நகரங்கள் அமைக்கப்படவேண்டும். தெற்கே ஐ.டி. ஏரியாவில் பணிபுரிவோரும், வடக்கே ஸ்ரீபெரும்புதூர் தொழில் வளாகத்தில் வேலை செய்பவர்களும் நகருக்குள் வர அவசியம் இல்லாதபடி குடியிருப்புகள் வேண்டும்." என்கிறார் தேவேந்திரன்.

# சென்னை!

அடுக்குமாடிக் குடியிருப்புகள் ஆகிய வற்றுக்கு கட்டிட அனுமதி கொடுப்பதற்கு பார்க்கிங் இடம் விட வேண்டுமென்பது கட்டாயம். ஆனால், விதிகளை மீறிக் கட்டப்படுகின்றன. சட்டப்படி நடவடிக்கை எடுக்க முயன்றால் கால்தாமதம் ஆகிறது.

"இடையில் அரசியல் அழுத்தம் வேறு", என்கிறார் சி.எம்.டி.ஏ. மூத்த அதிகாரி ஒருவர்.

**நகரெங்கும் கார் நெருக்கடி, தாமதம், விபத்துகள்! என்னாச்சு சென்னைக்கு?**

ஆவடி, பிராட்வே பஸ் நிலையம் ஆகியவற்றை மாற்றியதே நகர நெருக்கடியைக் குறைக்கத்தான். இனி பிளானிங் பர்மிஷனில் கார்பார்க்கிங் இருந்தால்தான் காரை வாங்க முடியும்; பதிவு செய்ய முடியும் என்று சட்டம் கொண்டு வரவேண்டும். இதற்கு அரசியல் துணிவு வேண்டும்" என்கிறார்.

ஜெயலலிதா ஆட்சியில் மழை நீர் சேகரிப்பு கட்டாயம் ஆக்கப்பட்டது. அது இப்போது நல்ல பலனைக் கொடுத்திருக்கிறது. அதுபோலப் போக்குவரத்து நெருக்கடியிலிருந்து சென்னையைக் காப்பாற்ற அதிரடி ஆக்ஷன் தேவை.

நகரின் போக்குவரத்தில் மிகுந்த அக்கறை கொண்டவர் டிராபிக் ராமசாமி. பொதுமக்கள் வசதிக்காகப் பல வழக்குகளைப் போட்டவர். "இங்கே லஞ்சம் ஊழல் என்று புரையோடியிருப்பதால் எந்தச் சட்டமும் எடுபடுவதில்லை. தி.நகர் வணிக வளாகங்கள் எதற்கும் பார்க்கிங் இடம் கிடையாது. எல்லாம் விதி மீறல் கட்டடங்கள். சட்டத்தின் சந்து பொந்துகளிலும் ஆளும் அரசியல்வாதிகளின் தயவிலும் தப்பித்துக் காலம் தள்ளுகிறார்கள். இதுவரை கட்டிய மேம்பாலங்களில் பாதி, நூறு சதவிகிதம் பயன்பாடில்லாமல் இருக்கின்றன. பாலம் கட்டியதன் மூலம் கடைக்காரர்களுக்குப் பார்க்கிங் வசதி செய்து கொடுத்துவிட்டார்கள். நந்தனம், ஸ்டெர்லிங் சாலை, வடபழனி சந்திப்பு போன்ற இடங்களில் முன்பே பாலம் கட்டியிருக்க வேண்டும். தனிமனிதன் சுயநலத்தைத் தூக்கியெறிந்தால்தான் நகரம் அபிவிருத்தி அடையும்" என்கிறார் டிராபிக் ராமசாமி.



டிராபிக் ராமசாமி

## சுயநலம் ஒழிய வேண்டும்!

"பத்து, பதினைந்து வருடங்களுக்கு முன்னரே, திட்டமிட்டு நகரத்துச் சாலைகளை மேம்படுத்தி அகலப்படுத்தியிருக்க வேண்டும். அரசியல் உறுதியுடன் பல்வேறு நடவடிக்கைகளை மேற்கொண்டிருக்க வேண்டும்" என்கிறார் தென்னிந்திய ஆட்டோ மொபைல் அசோசியேஷனின் செயலாளர் சுப்பிரமணியம். "ஒரு காலத்தில் கார் மேல்தட்டு மக்களுக்கு மட்டுமே உரியதாய் இருந்தது. காலம் மாறிவிட்டது. மக்களுடைய வாங்கும் சக்தி அதிகமாகிவிட்டது. தவிர இரு சக்கர வாகனம் மற்றும் கார் வாங்குவதற்குக் கடன் மிகச் சுலபமாகக் கிடைக்கிறது. அதே சமயம், கார் விலையும் இறங்கிவிட்டது. நடுத்தர மக்களின் கைவசமானது கார் கனவு" என்கிறார் அவர். பெருகி வரும் வாகன நெருக்கடியைத் தவிர்க்க சில ஐடியாக்களையும் கொடுக்கிறார் சுப்பிரமணியம்:

"நகரில் சாலையோரக் கடைக்காரர்கள், ஹோட்டல்கள், ஆட்டோ ஒர்க்ஷாப் காரர்கள் ஆகியோர் இரு புறமும் பத்தடிக்கு மேலே ஆக்ரமித்திருக்கிறார்கள். இவற்றை அப்புறப்படுத்தினாலே சாலை அகலமாகும். தவிர, மேற்கத்திய நாடுகளில் நடைமுறையில் இருக்கும் கார் பூலிங் (car pooling) என்ற முறையை இங்கேயும் அமுல்படுத்தலாம். நகரில் ஒரு குடியிருப்புப் பகுதியில் இருப்பவர்களில் ஐந்நூறுபேருக்கு, நகரில் வேறொரு பகுதியில் அலுவலகம் இருந்தால், அவர்கள் அனைவரும் தினசரி ஒரே காரில் பயணம் செய்யலாம். இதனால் சாலையில் வாகன நெருக்கடி குறையும். எரிபொருளும் மிச்சமாகும். அடுத்து, ஒரே குடும்பத்தில் இரண்டாவது கார் வாங்க வேண்டுமென்றால், பார்க்கிங் இடம் இருக்கிறது என்பதை அரசுக்குத் தெரிவித்து அனுமதி வாங்க வேண்டும் என்பதைக் கட்டாயமாக்கலாம். இதன் மூலம் சாலையில் பார்க் செய்வது குறையும்" என்கிறார் அவர்.

சுப்பிரமணியம்



சிங்கப்பூரில் கார் வைத்துக் கொள்வது காஸ்ட்லியான சமாசாரம். அங்கே காலை மாலை வேளைகளில் குறிப்பிட்ட நெருக்கடியான சாலை களைப் பயன்படுத்த வேண்டு மென்றால், அதற்கெனத் தனிக் கட்டணம் செலுத்த வேண்டும். இதற்கு எலக்ட்ரானிக் ரோட் பிரைசிங் (Electronic Road Pricing) என்று பெயர். நெருக்கடியான சாலைகளின் அனாவசியப் பயன்பாட்டைக் குறைக் கவே இந்தக் கட்டணம்.

இதைப் போலவே இந்திய நகரங் களிலும் கன்ஜெஷன் டாக்ஸை



# ஜகா வாங்கிய ரெட்டி!

(நெருக்கடிக் குறைப்புக் கட்டணம்) அமுல்படுத்தலாம் என்று மத்திய நகர்ப்புற மேம்பாட்டு அமைச்சர் ஜெய்பால் ரெட்டி பேசியிருக்கிறார். கூடவே இதையெல்லாம் கட்டாய மாக்க முடியாது. மாநிலங்கள்தான் பார்த்துக்கொள்ள வேண்டும் என்று கொஞ்சம் ஜகா வாங்கவும் செய்தி ருக்கிறார்.

– ப்ரியன்



இல.கணேசன்

ஐந்து ஆண்டு களுக்கு முன் தொடங் கியது பொற்றாமரை கலை இலக்கிய அரங்கம். அரசியல் சார்பின்றி வெற்றிகரமாக மாதம் ஒரு கூட்டம் நடத்தி வரும் இதன் தலைவர் இல.கணேசன் தற்போது தனது ஆறாம் ஆண்டுத் தொடக்க விழாவில் மும்முர மாகி விட்டார்.

''பக்தி இலக்கியங்கள் ஆற்றிய பங்கு சமீப காலங்களில் மறைக்கப்பட்டு, மறுக்கப்பட்டு, மறக்கடிக்கப்பட்டு வருகிறது.

இவை குறித்து இன்றைய இளைய சமு தாயத்துக்குச் சொல்லியாக வேண்டும். இன் றைக்கும் வாழ்ந்து கொண்டிருக்கின்ற கலைஞர் கள் மற்றும் இலக்கியவாதிகளைக் கண்டறிந்து ஊக்கம் தர வேண்டும் என்பதற்கே இப்பணி'' என்றார் இல.கணேசன்.

இந்த ஆண்டிற்கான...
நற்றமிழறிஞர்
நற்றமிழ்க் கவிஞர்
நல்லிசைக் கலைஞர்
சிறுகதைச் சிற்பி
சொற்பொழிவுச் செம்மல்
நாட்டியக் கலைமணி

விருதுகளுக்குத் தகுதி ,வாய்ந்தவர்கள் குறித்து விண்ணப்பங்களும் பரிந்துரைகளும் ஜூலை 10-ம் தேதிக்குள் பொற்றாமரை, 18, போஸ்டல் காலனி முதல் தெரு, சென்னை-33 என்ற முகவரிக்கு அனுப்பி வைக்கலாமாம்!

– சசி

# விண்ணப்பங்கள் வரவேற்கப்படுகின்றன!

# 04.07.10 முதல்



**மேஷம்:** மனம் முழுக்க உற்சாகம். உத்யோகத்தில் பதவி உயர்வு. சிலருக்கு மேல்நாடு செல்லும் யோகம். சுபகாரியப் பேச்சுகளில் வெற்றி. வரவேண்டிய பாக்கிகளின் வசூல். வியாபாரத்தில் நல்ல லாபம். இல்லற வாழ்வில் மகிழ்வு. சேமிப்பின் பெருக்கம். பிறகென்ன, வாரம் முழுவதும் சந்தோஷம்!



**ரிஷபம்:** இடமாற்றம் உண்டு. கூட்டுத் தொழிலில் கூட்டாளிகள் பிரிவர். வேலைப்பளுவில் கூடுதல். பிறருக்கு ஜாமீன் போடுவதைத் தவிர்க்கவும். உடல் நலத்திலும் கவனம் தேவை. வாகனத்தில் செல்லும்போது உஷார். இறைவழிபாட்டின் மூலம் குறைகள் தீர வழிபடலாம். வாரம் முழுக்க எச்சரிக்கையுடன் செயல்படவேண்டிய நேரம்.



**மிதுனம்:** வீடு மாற்றம் உண்டு. கடன் சுமை தீரும். தாயின் உடல்நலம் பாதிக்கும். உறவினர்களால் ஆதாயமும் பாராட்டும் கிடைக்கும். வேலைப் பளு அதிகமாகும். சிலருக்கு நீண்ட தூரப் பயண வாய்ப்பு ஏற்படும். செலவுகள் கட்டுக்குள் அடங்கியிருக்கும். தொழில் முறையில் வெற்றிகள் கிட்டும். வியாபாரம் செழிக்கும். கசப்புகள் இன்றி நல்லவை நிறைவேறும் வாரம்!



**கடகம்:** வெளியூரிலிருந்து நல்ல தகவல் வரும். பண வசதி பெருகும். திருமண காரியம் கைகூடும். புதிய வாய்ப்புகள் வந்து கதவைத் தட்டும். உறவினர்கள், நண்பர்கள் உதவுவார்கள். நீண்டகாலம் முடிவுக்கு வராத சில பிரச்னைகளில் நல்ல தீர்வு கிடைக்கும். சிலருக்குப் புதிய வாகனங்கள் வாங்கும் யோகம் கிட்டும். எதிர்பார்த்திருந்த வேலை வாய்ப்புகள் வந்து சேரும். மகிழ்ச்சி பொங்கும் வாரம்!



**சிம்மம் :** பணக்கஷ்டம் இருக்காது. சிலருக்குப் பதவி உயர்வும் கிடைக்கும். சுபகாரியப் பேச்சுவார்த்தை பலன் அளிக்கும். குடும்பத்தில் மகிழ்ச்சி பொங்கும். வியாபாரத்தில் வெற்றி கிடைக்கும். புதிய தொழில் துவங்க நல்ல தருணம். நண்பர்கள் பல விதங்களில் உதவுவார்கள். சிலருக்குப் புதிய சொத்து வாங்கும் யோகமும் கிட்டும். இன்பம் பொங்கும் வாரம்!



**கன்னி:** திடீர் தனயோகம் சேரும். வரவேண்டிய பாக்கிகள் வசூலாகும். சத்ரு தொல்லை தீரும். தடைபட்டு இருந்த சுபகாரியங்கள் வெற்றிகரமாக நிறைவேறும். பயணங்களின் எண்ணிக்கை அதிகரிக்கும். உத்யோக மாறுதல் ஏற்படும். வியாபாரம் வெற்றிகரமாக இருக்கும். வெளிநாட்டில் இருந்து நல்ல தகவல் வரும். குடும்ப உறவு நன்றாக உள்ளது. வழக்குகளில் நல்ல தீர்வுகள் கிட்டும். இனிமையான வாரம்!

# நடக்குமென்பார்

# 10.07.10 வரை



**துலாம் :** பணமுடக்கம் ஏற்படும். வீடு மாற்றம் உண்டு. உத்யோகத்தில் வேலைப்பளு அதிகரிக்கும். கடன் பிரச்னை தீரும். நீண்ட காலம் விலகியிருந்தவர்கள் திரும்ப வந்து ஒட்டிக் கொள்வார்கள். உடல் நலத்தில் கவனம் தேவை. திருமணப் பேச்சுவார்த்தை பலன் அளிக்கும். புதிய தொழில் வாய்ப்பு அமைய வழியுண்டு. விழிப்புடன் செயல்பட வேண்டிய வாரம்!



**விருச்சிகம் :** உடல் நலத்தில் கவனம் தேவை. கொடுக்கல் - வாங்கலில் எச்சரிக்கை. வாகனப் பயணத்தில் எச்சரிக்கை தேவை. சுபச் செலவுகள் உண்டாகும். ஜாமீன் போடுவதைத் தவிர்ப்பது நல்லது. செய்யும் எந்தச் செயலிலும் கவனம் தேவை. கடவுள் வழிபாட்டுடன் கருணை கிட்டும் வாரம்!



**தனுசு :** திருமணக் காரியம் கைகூடும். வாகன சௌக்கியம் உண்டாகும். திடீர்ப் பயணம் உண்டு. வீடு மாற்றம் செய்ய வேண்டியிருக்கும். வீடு / மனை வாங்க உகந்த தருணம். கடன் பிரச்னை தீரும். உத்யோகத்தில் பதவி உயர்வு உண்டு. குடும்பத்தில் எதிர்பாராத இடத்திலிருந்து உதவிகள் கிட்டும் வாய்ப்பும் உண்டு. உடல் நலம் நன்றாகவே இருக்கும். இனிய நிகழ்வுகளுடன் மகிழ்வோடு இருக்கும் வாரம்!



**மகரம் :** அற்புதமான வாரம். அதிசய சம்பவங்கள் நடக்கும். மனதில் நினைத்த காரியம் நடக்கும். கடன் தொல்லை தீரும். வீடு / மனை வாங்கும் யோகம் வந்து சேரும். வர வேண்டிய நிலுவைகள் வந்து சேரும். செலவுகள் கட்டுக்குள் அடங்கும். வியாபாரத்தில் சிறப்பான லாபம் வரும். உடல் நலமும் நன்றாக இருக்கும். வருகிற மகிழ்வுத் தருணங்களை வாட்டமின்றி அனுபவிக்கும் வாரம்!



**கும்பம் :** சுபகாரியம் கைகூடும்! பூர்விகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும். வழக்கு முடிவுக்கு வரும். வரவேண்டிய பணம் வந்து சேரும். செலவுகள் கட்டுக்குள் அடங்கும். புதிய வீடு / மனை வாங்கச் சிறந்த தருணம். நண்பர்கள் உதவுவார்கள். நல்ல பலன்கள் நிகழும் வாரம்!



**மீனம் :** மன நிறைவான காலம். உறவினர்கள் மூலம் நல்ல தகவல் வந்து சேரும். வீடு / மனை மூலம் ஆதாயம் கிட்டும். கடன் பிரச்னை தீரும். குடும்ப உறவு நன்றாக இருக்கும். உத்யோகத்தில் சம்பள உயர்வு கிடைக்கும். வரவேண்டிய பணம் வந்து சேரும். மகான்களின் சந்திப்பும், புண்ய ஸ்தல பயணமும் உண்டு. வீடு மாற்றம் தவிர்க்க இயலாதது. எதிர்ப்புகள் விலகும். திடீர்ப் பயணம் வரும். மனமகிழ்வுடன் கொண்டாட வேண்டிய வாரம்!

# நடக்கும்!

தஞ்சை பரத்வாஜ்

ஒரு முறை குருவிக்கூடு + வாழ்த்து; பிறகு முட்டை ஓடுகள் - ஓவியம் + வாழ்த்து; இன்னொரு முறை புசுபுசுவென்று வெள்ளை நிற நாய்க் குட்டி + அதன் கழுத்து ரிப்பனிலேயே வாழ்த்து; அப்புறம் பெரிய வால் முளைத்த பட்டம் + வாழ்த்து; வேறொரு முறை, உண்டியல் + வாழ்த்து... என்று வருடத்திற்கொன்று! கட்டாயம் நாலைந்து பொடிசுகளையும் கூட்டிக் கொண்டுதான் வருவான்! "ஹே!" என்று கோரஸாய்க் கூச்சலிட்டு, கைதட்டி, "ஹாப்பி பர்த்டே டு யூ பெரிம்மா!" என்று பாடி அவளைச் சூழ்ந்து கொள்கிறபோது - அவளுக்கு அழுகையும் சிரிப்பும் சேர்ந்தே வரும். அவன் சேதி அவளுக்கும் தெரியும்... எனவே நூடுல்ஸ், குலோப்ஜாமூன்; ஐஸ்க்ரீம்; மாஃபின்ஸ், சாக்லேட் என்று அடுக்கி வைத்திருப்

# சின்னவர்களா..?

பாள்... டைனிங் ஹாலில் ஒரு குட்டிக் களேபரம் நடந்ததும், படை களைப்பாய்க் கிளம்பிப் போகும்!

டாக்டர் சித்ராவுக்கு 'அச்சு' என்றால் கொள்ளைப் பிரியம்! அர்ஜுனுக்கோ பெரியம்மாதான் உயிர்; ஹைட் அண்ட் ஸீக் தோழி; கதை சொல்லும் தோழி; அடிக்கத் தெரியாத சிநேகிதி... பெரிய ஆதர்சம்!

மொபைலிலும், மெயிலிலும் குவிந்திருந்த வாழ்த்துகளைப் புறந்தள்ளி, 'மனம் அச்சு வருவானா?' என்று ஏங்கத் தொடங்கியது! கூடவே அவன் எப்படி வருவான்? யார் விடுவார்கள் அவனை? என்ற கேள்விகளும் கவலைகளும்...

இரண்டு வீட்டிற்கிடையிலும் பகை பற்றி எரிகிறது! பேச்சு வார்த்தையில் தொடங்கி இன்று கோர்ட்டில் கேஸ் நிலுவையில் நிற்கிறது. சொத்துக்கில்லாதவர் களாட்டம் அண்ணனும் தம்பியும், அதாவது டாக்டரும் வக்கிலும் மாய்ந்து போகிறார்கள். ஒதுங்கி நின்று ஊர் சிரிக்கிறது.

"வருவேன் பெரிம்மா! உன் பர்த்டேக்குக் கண்டிப்பா வருவேன். ப்ராமிஸா சத்தியமா!" - மிக அழுத்தமாய்ச் சொல்லியவனைப் பார்த்து, சித்ராவால் சோகமாய்ச் சிரிக்கத்தான் முடிந்தது! அவளிடமிருந்து அவனை வலுக்கட்டாயமாய்ப் பிய்த்துப் பிடுங்கிக் கொண்டுதான் போனார்கள்.

"வாயைத் திறக்கச் சொல்லி ஒரு பல்லு பாக்கியில்லாம எல்லாத்தையும் தட்டி வெளியே போடுங்க மேடம்! ஓயாத சாக்லேட்டுதான்; சதா முட்டாயிதான். சாக்லேட்டுப் பேப்பரைப் பிரிக்கிற நேரம் கூடப் பல்லு தேய்க்கிறது கிடையாது மேடம். பூச்சிப் பல்லு வராத என்ன பண்ணும்? ஊசி வெச்சிருக்கீங்கல்ல நீங்க? பெரிய்...ய்ய ஊசி?"

கடைசியாய்ச் சொன்ன அந்த ஒற்றை வார்த்தை போதுமானதாயிருந்தது. உதடு பிதுக்கி, குழந்தை சப்தமில்லாமல் - கேவலும் விசும்பலுமாய் அழத் தொடங்கியது. முகத்தில் பயம் படர, பிடிவாதமாய் அம்மாவின் தோள்களை இறுக்கிக் கொண்டு, இறங்காமல் முரண்டு பண்ணி



ரோஷினி

யது!

ஆசிரியர்களையும், மருத்துவர்களையும் கொடுங்கோலர்களாகவே பார்க்க வைக்கிற பெற்றோரைச் சொல்ல வேண்டும்!

''ஓகே! குட்டிப் பொண்ணு பேர் என்ன?''

''ரேஷ்மா... எல்.கே.ஜி... ம்ஹூம்! யூ.கே.ஜி.பி!'' - மாற்றிச் சொல்லியதால் ஏற்பட்ட வெட்கம் சட்டென்று அதன் முகத்தில் சிரிப்பாய் வழிந்தது!

''வெ...ரி...குட்! ம்.. ரேஷ்மாக்கு என்னெல்லாம் பிடிக்கும்?' - சிநேகமான இந்தக் கேள்வியை அலட்சியப்படுத்தி, சித்ராவைப் பார்த்து, ''ஊசி போடுவீங்களா?'' என்றது. அதன் பார்வை, வைக்கப் பட்டிருந்த பரிசோதனைக் கருவிகளின் மேலேயே படிந்து நின்றது. அதுவும் நல்லதுதான்!

''ஹே! இதைப் பார்த்தியா? குட்டிக் கண்ணாடி? ரேஷ்மாவோட குட்டிக் குட்டிப் பல்லெல்லாம் சுத்தமாயிருக்கா, வரிசையாயிருக்கா, அழகாயிருக்கான்னு பார்க்கலாமா? ரெடி?''

''வலிக்குமா?'' - மறுபடியும் பயம்; கண்களில் பீதி.



# எனக்கு வலிச்சா சாமி உங்க கண்ணைக் குத்திருவாரு

"சே... சே... வலிக்காது!"

"காட் பிராமிஸா?" - படக்கென்று கைநீட்டியது! ஒருகணம் திகைத்து, தொடர்ந்து வந்த சிரிப்பை அடக்கி, அந்தச் சின்னக் கையைப்பற்றி அமுக்கினாள் சித்ரா. ரேஷ்மா, சட்டென்று சத்தியம் உள்ள கையை மூடியது; கண்களை இறுக்க மூடி ஏதோ தியானித்தது; பின் அதே கையை வெடுக்கென்று வெளியே விரித்து நீட்டி, மேலே பார்த்துக் கொண்டே, "ஃப்பூ!" என்று சன்னமாய் ஊதியது.

"அவ்ளோதான்! சாமிக்கிட்ட போயிட்டு. எனக்கு வலிச்சா சாமி உங்க கண்ணைக் குத்திடுவாரு!"

"அச்சச்சோ!" என்று சித்ரா பொய்யாய்ப் பயந்த போது, ரேஷ்மாவின் முகத்தில் தெளிவு கூடியிருந்தது. தைரியமாய், 'ஆ', 'ஈ', 'ஊ' எல்லாம் காட்டியது!

மருந்து மாத்திரை எழுதிக் கொடுத்து, பல்லைப் பிடுங்க வேண்டாம். சுத்தம் பண்ணி அடைக்கலாம் என்று சொன்னதில், ரேஷ்மாவின் அம்மாவிற்குத் திருப்தியில்லை! பல்லைப் பிடுங்காமலேயே பணத்தைப் பிடுங்குகிறாளேயென்ற என்ற எண்ணம் போலும். போகட்டும் அந்தக் குழந்தையின் சத்தியம் - சின்ன வயதில் - பெரிய நம்பிக்கை! அதைப் போயா கெடுப்பது?

ஏதோ உந்தியது. மதியம் கிளினிக்கிலிருந்து நேரே ஷாப்பிங் போனாள் சித்ரா. வேஃபர்ஸ், ஐஸ்க்ரீம், க்ரேயான்ஸ் என்று எதையெதையோ அள்ளிக் கொண்டு வீடு போய் சேர்ந்தபொழுது மணி இரண்டு.

எல்லாவற்றையும் அப்படியே போட்டுவிட்டு, முகம் கைகால் கழுவி, சுவாமி படத்தின் முன் நின்று கைகளைக் குவித்துவிட்டு, சடாரென்று நினைவு வந்ததே போல் - வலக்கையை உயர்த்தி நீட்டி மெல்ல "ஃப்பூ!" என்று ஊதினாள்.

சாப்பிடத் தோன்றாமல் ஒரு தம்ளர் ஜூஸ் குடித்து, வழக்கம் போல் மினி பார்ட்டிக்கான ஆயத்தங்களில் ஈடுபட்டபொழுது -

"ஹே!" என்ற பெருங்கூச்சலும், கேட் படாரெனத் திறந்து மூடப்படும் சப்தமும் கேட்டது!

நம்பிக்கைகளைக் காப்பாற்றுவதில் கடவுளும், குழந்தைகளும் - எப்போதுமே கைகோர்த்துக் கொள்கிறார்கள்! ●



"ஒரு பட்டனை அமுத்தினால் எல்லா வேலையும் செய்யற மாதிரி ஒரு மிஷின் இருந்தா எப்படியிருக்கும்?"

"போடா, அந்தப் பட்டனை யார்டா அழுத்தறது?"

- எம்.திருமேனி



அருள்வாக்கு

# எளிய வாழ்க்கை

'நாம் எப்படி வாழ்கிறோமோ அப்படியே மற்றவர்களும் வாழ வேண்டும்' என்று நினைப்பது உத்தமமான எண்ணம். ஆனால் எண்ணம் உத்தமமாயிருந்து விட்டால் போதுமா? நாம் டாம்பீகமாக வாழ்க்கை நடத்திக் கொண்டு, மற்றவர்களும் அப்படி இருக்க வேண்டும் என்று ஆசைப்பட்டால் அது நடக்குமா? அப்படியே நடந்து அமெரிக்கா மாதிரி எல்லாரும் 'லக்ஷுரியஸாக' வாழ முடிந்தாலும் அது நல்லதுதானா? லௌகிகமான ஸௌக்யங்கள் ஜாஸ்தியாக ஆக, ஆத்மாபிவிருத்திக்கே வழியில்லாமல்தானே ஆகியிருக்கிறது? எத்தனை போட்டாலும் திருப்தியில்லாமல் கபளீகரம் பண்ணுகிற நெருப்பு மாதிரித்தான் இந்த ஆசை என்பது. அது எவ்வளவு ஸௌகர்யம் இருந்தாலும் திருப்திப்படாமல் இன்னும் புதிசு புதிசாக ஸௌக்ய ஸாதனங்களைத் தேடிக் கொண்டுதான் இருக்கும்.

மனுஷ்யனின் ஆத்மாபிவிருத்திக்கு பிரதிகூலமாக வெறும் லௌகிக ரீதியில் செய்கிற எந்த உபகாரமும் உபகாரமேயில்லை, அபகாரம்தான். எத்தனைக்கெத்தனை எளிமையாக வாழ்கிறோமோ அத்தனைக்கத்தனை ஆத்மக்ஷேமம். ஆகையால் மற்றவர்கள் எளிய வாழ்க்கையில் இருக்கும்படியாகப் பண்ணுவதுதான் நிஜமான உபகாரம். இதை எப்படிப் பண்ணுவது? நாம் டாம்பீகமாக வாழ்ந்து கொண்டு அவர்களுக்கு உபதேசம் செய்தால் நடக்குமா? ஆகையால் நாமே எளிமையாக வாழ்ந்துகாட்ட வேண்டும். அதாவது, 'நாம் எப்படி வாழ்கிறோமோ, அப்படியே பிறரும் வாழவேண்டும்' என்று நினைப்பதற்கு முந்தி, நாம் எப்படி வாழவேண்டும் என்பதையும் தீர்மானம் பண்ணிக் கொள்ள வேண்டும். 'ஏழைகள் உள்பட மற்றவர்கள் எல்லோரும் எப்படி வாழ முடியுமோ, எப்படி வாழ்ந்தால்தான் ஆத்மாபிவிருத்திக்கு நல்லதோ, அப்படித்தான் நாமும் வாழவேண்டும்; அதாவது ரொம்ப ஸிம்பிளாக வாழவேண்டும்' என்று முதலில் தீர்மானம் பண்ணிக்கொள்ளவேண்டும்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர
சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

நதியா கம்மல், நதியா வளையல், நதியா கொண்டை, நதியா டிரஸ்... என அலங்கார உலகை நதியா புகழ் ஆக்கிரமிச்சிருந்த காலம் உண்டு. குடும்பப் பெண்மணியாக, தாயாக மாறிய பிறகும்... 'எம்.குமரன்' படத்திற்குப் பின் மீண்டும் கொடிகட்டி... ஜெயா டீ.வி.யில் ஜாக்பாட் நிகழ்ச்சியில் குஷ்பு இடத்திற்கு குடியேறி... வாரந்தோறும் நதியா நைல்நதியாகக் குளிர்ச்சியூட்டும் அவரைச் சந்தித்துக் கேட்டபோது...

**'ஜாக்பாட்'டில் குஷ்பு இடத்தைப் பிடிச்சிட்டீங்களா?**

''ஆமாம். பிடிச்சுட்டேன்தான். அதுல என்ன சந்தேகம்?''

**நிழல் மாதிரி உங்க அழகு எப்படி உங்களை விட்டு விலகாம கூடவே வருது?**

''ஒன்னுமில்லப்பா. வாழ்க்கை டிஸிப்பிளினா இருந்தா அழகு தானா மெயின்டெயின் ஆகும். டிஸிப்பிளின் கிறது பழக்க வழக்கம், உணவு, புத்தி எல்லாம் சேர்ந்ததுதான்.''

**ஜாக்பாட்டில் கேள்வி கேட்கும்போது 'அட...**

# "குஷ்பு இடத்தைப்

**நெசமா இதுக்குப் பதில் நமக்குத் தெரியலியே'ன்னு ஃபீல் பண்ணதுண்டா?**

''கண்டிப்பா... எல்லாப் பதில்களும் எனக்குத் தெரிஞ்சிருக்க வாய்ப்பில்லையே. கேள்வி கேட்டுட்டு எல்லோரையும் போல, நானும் ஸ்கிரீனைப் பார்ப்பேன். எனக்குத் தெரிந்த பதில் ஸ்க்ரீனில் வந்தா, எனக்குள் நானே தட்டிக் கொடுத்துப்பேன் சபாஷ்ன்னு!''

**மும்பைக்கும், சென்னைக்கும் என்ன வித்தியாசம்?**

''மும்பையில நான் ஜெரீனா - குடும்ப முகம்.

சென்னையில புரொஃபஷனல் ஃபேஸ்.''

**சினிமாவிலிருந்து சின்னத்திரைக்கு நடிக்க வராம கேம்ஷோவுக்குப் போனது ஏன்?**



''எனக்கும் நடிக்க வாய்ப்பு வந்தது. குடும்பத்தோட அதிக நாட்கள் செலவு செய்ய விரும்புறவ நான். அதனால குறைச்ச நாளுக்கான கால்ஷீட் உள்ள கேம்ஷோவை செலக்ட் பண்ணேன். இந்த நிகழ்ச்சியில் கூடக் குடும்பங்களின் கலகலப்பு கலந்திருக்கிறதால இதுல நான் அன்னியமா உணரலை.''

**அடுத்து எப்போ அரசியல் பிரவேசம்?**

''ஆள விடுங்கப்பா சாமி! எனக்கு என் குடும்பம் முக்கியம். அதுக்கே நேரம் போதலை. நமக்கு அரசியல் சரி வராது.''

**ஜெயலலிதா பற்றி...? (சொல்ல முடியுமா?)**

''ஆணாதிக்கச் சமூகத்தில் பெண்கள் தங்களை நிரூபிக்க ஆண்களை விட அதிகம் உழைக்க வேண்டியிருக்கு. விடாமுயற்சி, உழைப்பு, வெற்றியை நோக்கியே சிந்திப்பது இப்படிப் பல விஷயங்களை பெண்கள் அவங்ககிட்ட கத்துக்க வேண்டியிருக்கு. இந்த விஷயத்தில் அவங்களைப் பிடிக்கும்.''

**அடுத்தடுத்த இலக்கு என்ன?**

''காலம்தான் முடிவு பண்ணும்.''

**- ராகவ்குமார்**



# ...பிடித்தேன்!"

# - நதியா



மோனோ காசி

மனத்தை
பிரதிபலிக்கும் ஓசை!

# பிரீஸ்... முழுசாயிருங்க!

‘‘மோனோலிசா ஓவியம்னா எனக்கு அவ்வளவு உயிர். அந்தப் புன்னகை விலை மதிப்பில்லாதது. அதுல மயங்கித்தான் என்னோட பேரை ‘மோனோகாசி’ன்னு மாத்திக்கிட்டேன்’’ என்கிறார் ஓவியர் காசி விஸ்வநாதன். சேலம் மின்னாம்பள்ளி கிராமத்துக்காரரான இவர், மூன்று வயதில் வரையத் துவங்கியவர். அரசுப் பள்ளியில் ஓவியராகப் பணியாற்றி வருகிற இவர், தன்னோட ஓவியங்களில் நிலமும் நிலம் போர்த்திக் கொண்ட வெளிச்சமும் தான் பிரதானம் என்கிறார். கண் காட்சிக்குத் தயாராகும் மோனோ காசி ‘ஓவியத்தை ரசிக்கத் தெரிந்தவன் முழுமனிதன். ஒவ்வொரு வீட்டிலேயும் ஒரு ஓவியமாவது இருந்தால் அது முழுமைபெற்ற வீடு. பளீஸ் நீங்களும் முழுசாயிடுங்க’ என்கிறார். கணினியில் வரையும் இந்தக் கலைஞன்.

சந்திப்பு : **அமிர்தா**

புகைப்படம் : **சின்னராஜ்**


வெட்கத்தில்...
வெளிச்சத்தைப் போர்த்திய நிலம்!


என்னைக் கொண்டாரு...
உன்னைப் பூக்க வைப்பேன்!


நமக்குள் ஒளிரும் அன்பு!

# என் 'செல்'லமே!



'எங்க வீட்டுக்கு டெலிபோன் வந்த நாளை என்னால் மறக்கவே முடியாது. அப்போ நாங்க ஸ்ரீரங்கத்துல இருந்தோம். சென்னையில் இருக்கும் பையனிடம் ஆசைதீரப் பேச வேண்டும் என்பதற்காகவே 2003 ஆம் ஆண்டு முதன்முதலாகத் தொலைபேசி வாங்கினோம். முதன் முதலில் குழந்தை பிறந்தவுடன், அதன் குரலைக் கேட்டு ஒரு தாய் எவ்வளவு சந்தோஷம் அடைவாளோ அதைப் போலவே நானும் முதன்முதலாகத் தொலைபேசியின் வழி என் உற்றார் உறவினர்களின் குரலைக் கேட்டுச் சந்தோஷப்பட்டேன். என் முதல் செல்லத் தோழி நிச்சயம் இந்தத் தொலைபேசி தான். எங்களது 25வது திருமண ஆண்டு விழாவுக்கென அன்புப் பரிசாக என் மூன்று மகன்களும் 2006-ல் செல்போன் வாங்கித் தந்தார்கள். செல்ல மகன்கள் வாங்கித்தந்த அந்த செல்போனும் என்னோட ரெண்டாவது செல்லம். மூர்த்தி சிறிதெனினும் கீர்த்தி பெரிதாக உள்ள பொருளாச்சே!

**- திருமதி சுதா பார்த்தசாரதி**



'என்னோட செல்போன் பத்திப் பேசச் சொன்னா இன்னிக்கு பூரா பேசிக்கிட்டே இருப்பேன். 2006 - ஆம் வருஷம் செப்டம்பர் மாசம் நான் 10 ஆம் வகுப்பு பாஸ் பண்ணினதுக்காக எங்கம்மா, அப்பா எனக்கு கேமரா பொருத்திய மொபைல் போன் வாங்கிக் கொடுத்தாங்க. அப்போல்லாம் கேமரா பொருத்திய செல்போனைப் பார்ப்பதே ரொம்ப அபூர்வமான விஷயம் இல்லியா. முதல் நாள் செல்போன் வந்த அன்னிக்கு ராத்திரி முழுக்க நான் தூங்கவே இல்லீங்க. அன்னிக்கு திங்கள் கிழமைங்கறதால, எங்கம்மா செவ்வாய்கிழமைதான் செல்போனை இயக்க ஆரம்பிக்கணும்னு சொல்லிட்டாங்க. செவ்வாய் கிழமை காலைல அதிசயமா 5 மணிக்கெல்லாம் எழுந்திருச்சு, சாமி முன்னாடி அந்த செல் போனை வெச்சு கும்பிட்டு விட்டு, செல்போனை எடுத்து நான் என் அண்ணன் கிட்ட பேசின அந்த ஒரு நிமிடம் இருக்கே, அதை மறக்கவே முடியாது.

**- பத்மினி.**

**வாசகர்களே!**
**உங்க செல்ல போன் அனுபவத்தை எழுதுங்க...**
**kalki@kalkiweekly.com-க்கும் அனுப்பலாம்**


✱ பத்மினி

# கல்வெட்டுகள்

வரதக்ஷிணை ஒழியத்தான் வேண்டும்; இன்னும் சமூகத்தில் அதைப்போல் உள்ள கொடுமைகளும் ஊழல்களும் ஒழியத்தான் வேண்டும். ஆனால், சில சமூகத் தீமைகளைச் சட்டத்தின் மூலம் ஒழிக்கலாம்; வேறு சில சமூகத் தீமைகளைச் சட்டத்தின் உதவியுடன் பொதுஜனக் கிளர்ச்சி செய்து நிவர்த்திக்கலாம். இன்னும் சில தீமைகளை இந்த வழிகளினால் நிவர்த்திக்க முடியாது; அவற்றின் மூல காரணங்களைக் கண்டுபிடித்து அங்கே தாக்க வேண்டும்.



வரதக்ஷிணை என்னும் தீமைக்கு மூலகாரணம், பெண்களுக்கு சொத்துரிமை இல்லாமலிருப்பதுதான். அத்துடன், பெண்களைக் கலியாணமாகாமல் வைத்திருக்கக் கூடாது என்ற சாஸ்திரமும், மாப்பிள்ளை கிராக்கியும் சேர்ந்து, அந்த வழக்கத்தை மிகக் குரூரமானதாய் ஆக்குகின்றன. பெண்களுக்குப் பிதிரார்ஜித சொத்தில் சமபாகம் கொடுத்துவிட்டால், வரதக்ஷிணை உடனே ஒழிந்துவிடும். அதனால் வேறு பல நன்மைகளும் உண்டு:

1. வரன் தேடுவதிலும், கலியாண நிச்சயம் சம்பந்தமான பேரங்களிலும் இப்போது ஏற்படும் கால விரயமும், பண விரயமும் மிச்சமாகும். பெண்ணின் சொத்து நிலைமைக்கேற்ப வரன்கள் சுலபமாய்க் கிடைத்து விடும்.

2. இப்போது ஸ்ரீமான் கன்னிகாதானமும் ஸ்ரீமான் சம்பந்தியும் ஒருவர் பணத்தை ஒருவர் விரயம் செய்வதிலேயே கண்ணுங் கருத்துமாயிருக்கிறார்கள். அப்போது சொத்தைக் காப்பதில் இருவருக்கும் சிரத்தை இருக்கும்.

3. எவ்வளவு வரதக்ஷிணை கொடுத்தாலும், இப்போது பெண்களுக்குப் புக்ககத்தில் கௌரவம் கிடையாது; சொத்துள்ள பெண்களைப் புக்ககத்தில் கௌரவமாய்த்தான் நடத்துவார்கள். வாழ்க்கையிலும் அவர்களுக்குக் கௌரவம் ஏற்படும்.

## சுதந்திர ஜீவனம்!

ஆகவே, வரதக்ஷிணையை ஒழிக்க விரும்புகிறவர்கள், முதலில் செய்ய வேண்டிய சட்டம் பெண்களுக்குச் சொத்துரிமை கொடுப்பது. அடுத்தபடியாக, பெண்களுக்குக் குறிப்பிட்ட வயதுக்குள் கல்யாணம் ஆகிவிட வேண்டும் என்ற மூடக்கொள்கை மாறவேண்டும்; இஷ்டப்பட்டால் அவர்கள் கல்யாணம் செய்து கொள்ளாமலே கண்யமான தொழில்கள் செய்து, சுதந்திர ஜீவனம் நடத்துவதற்குப் பொதுஜன அபிப்பிராயம் இடந் தரவேண்டும்.

– ஆனந்தவிகடன், 24.5.1936



வண்ணநிலவன்

# உள்ளும் புறமும்

மனோகரி கடலையே பார்த்துக் கொண்டிருந்தாள். கண்கள் கலங்கியிருந்தன. மணல் பரப்பில் கிடந்த காகிதம் ஒன்று அவர்களருகே காற்றில் பறந்து சென்றது. சாலையில் செல்லும் காரின் ஹார்ன் சத்தம் இலேசாகக் கேட்டது. மனோகர் அவள் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தான். மத்தியானம் சாப்பிடும்போது பற்களுக்கிடையே மாட்டிக் கொண்ட வெங்காயத் துண்டை அவனுடைய நாக்கு நீவிக் கொண்டேயிருந்தது. என்ன சொல்வதென்றே புரியவில்லை. ஏதோ தவறான முடிவுக்கு அவள் வந்திருக்கிறாளென்று தோன்றியது. ஆனால், ஏன் இப்படியெல்லாம் பேசுகிறாள்?

''இவ்வளவு வருஷத்துக்கப்புறம் இப்போ உனக்கு என்ன வந்தது அக்கா?''

''என்னம்போ பிடிக்கலை. இதுக்கு என்ன நேரம் காலமா பார்த்துச் சொல்ல முடியும்?''

''அதுதான் ஏன்னு கேக்கறேன்?''

''அத்தான் முன்னே மாதிரியில்லே.''

''எதை வைச்சு இப்படிச் சொல்றே?''

''சுசீலா அவங்களைச் சுத்திச் சுத்தி வர்றா.''

''யார் அது?''

''யாருன்னா... அது அவங்களோட கேர்ள் ஃப்ரண்ட்'' என்று சொல்லிவிட்டுக் கண்ணீரை முந்தானையால் துடைத்துக் கொண்டாள்.

''கேர்ள் ஃப்ரெண்ட்டா? என்னக்கா இது என்னென்னமோ சொல்றே?''

''ஆமா கேர்ள் ஃப்ரண்ட்தான்.''

''எப்படி உனக்குத் தெரியும்?''

''அதான் வீட்டுக்கே வர்றாளே...''

அவனால் அதை ஜீரணிக்க முடியவில்லை. அத்தானா இப்படியெல்லாம் நடந்து கொள்கிறார் என்று தோன்றியது. எவ்வளவு சாதுவானவர் அவர். அவரா பெண் ஸ்நேகிதி வைத்துக் கொண்டிருக்கிறார்? ஒருவேளை அவரது ஆபீஸில் வேலை பார்க்கிற பெண்ணாக இருக்குமோ என்று நினைத்தான். பொதுவாகவே பெண்களின் மனம் எளிதில் சந்தேகத்துக்கு ஆளாகிவிடும். மனோகரி தலைகுனிந்து அழுது கொண்டிருந்தாள். இதையெல்லாம் தம்பியிடம் போய்ப் பேச வேண்டியதாகி விட்டதே என்ற ஆதங்கம் வேறு. கூனிக்குறுகி உட்கார்ந்திருந்தாள். அக்காவின் தோளைத் தொட்டுச் சமாதானப்படுத்தினான் மனோகர்.

''அழாதே அக்கா... யாராவது பார்க்கப் போறாங்க. யாராவது அத்தானோட கூட வேலை பார்க்கிற பொண்ணா இருக்கும். நீ நெனைக்கிற மாதிரியெல்லாம் ஒண்ணுமே இருக்காது அக்கா. அத்தான் அந்த மாதிரிப்பட்டவங்க இல்லே அக்கா...'' என்றான்.

''ஒனக்கென்ன தெரியும் அவங்களைப் பத்தி. பதினைஞ்சு வருஷமா அவங்க கூடக் குப்பை கொட்டுறவா நான் இல்லா?''

கிருஷ்ணபாரதியை நினைத்தபோது அவளுடைய அழுகை மேலும் அதிகரித்தது. புடைவைத் தலைப்பால் முகத்தை மூடிக் கொண்டு அழுதாள். அவனுக்கு அக்காவை என்ன சொல்லித் தேற்றுவதென்று தெரிய வில்லை. அவளாகவே அழுது முடிக்கட்டும் என்று நினைத்தான். பலத்த சப்தத்துடன் ஒரு அலை வந்து விட்டுப் போனது. சுண்டல் விற்கிற ஆள் ஒருவர் அருகில் வந்தார். அவரிடம் வேண்டாம் என்று சொல்வதற்குள், மனோகரி கண்களைத் துடைத்துக் கொண்டு, "சுண்டல் கொடுப்பா..." என்றாள். சுண்டல் வியாபாரி இரண்டு பேருக்கும் சுண்டல் கொடுத்தார். ''இரு... நான் கொடுக்கிறேண்டா'' என்று சொல்லிக் கொண்டே ஹேண்ட்பேக்கைத் திறந்தாள்

12

மெல்லினத் தொடர்கதை

மனோகரி. அதற்குள் சட்டென்று சட்டைப் பையிலிருந்து பத்து ரூபாயை எடுத்து மனோகர் கொடுத்து விட்டான்.

வலது கையில் சிறிது சுண்டலைக் கொட்டி வாயில் போட்டான். சுண்டலின் இதமான காரம் சுவையாக இருந்தது. இப்போது அவளைச் சமாதானப்படுத்தலாம் என்று அவனுக்குத் தோன்றியது. அவனும் சுண்டலைச் சாப்பிட்டுக் கொண்டே பேச ஆரம்பித்தான்.

''எதையாவது போட்டு மனசைக் குழப்பிக்காதே அக்கா. அத்தானைப் பற்றித் தப்பா நினைக்காதே. நீ வேலை பார்க்கிற ஆஃபீஸிலே உன் கூட எவ்வளவு ஆம்பளைகள் வேலை செய்கிறாங்க. அந்த மாதிரித்தான் அந்தப் பொண்ணும்... அத்தான் கூட வேலை பாக்கற பொண்ணா இருக்கும்.''

''அவ அத்தான் கூட வேலை வேறே பாக்கணுமா? அது ஒண்ணுதான் கொறைச்சல்..'' என்றாள் ஆத்திரத்துடன்.

''அத்தானோட வேலை பார்க்கலியா? அப்போ எதுக்காகப் போட்டுக் குழப்பிக்கிடுதே?''

''நானா குழப்புறேன்? குடும்பத்தைக் குழப்பறது ஒன்னோட அத்தான். அவ இவங்க கூடச் சேர்ந்துக்கிட்டுப் பெண் உரிமை அது இதுன்னெல்லாம் பேசறா. கவிதைகள் எழுதிக்கிட்டு வீட்டுக்கே வந்து இவங்ககிட்டே காட்டறா? இந்தப் பெண் உரிமை பேசறவளுகளே துணிச்சல்காரியாத்தான் இருப்பாளுக. நேத்து ராத்திரி கூட வீட்டுக்கு வந்திருந்தா. பக்கத்திலேயேதான் அவளுக்கு வீடு... அது இதுன்னு சொல்லிக்கிட்டு அடிக்கடி வீட்டுக்கு வர்றதும் இவங்களைத் தொட்டுத் தொட்டுப் பேசறதும்.. அதையெல்லாம் பார்த்துக்கிட்டுச் சும்மா இருக்கச் சொல்லுறியாடா?'' என்று பொரிந்து தள்ளினாள் மனோகரி.



"நம்ம கட்சியிலேயும் தொண்டர்கள் இருக்காங்கன்னு தலைவர் நிரூபித்து விட்டார்!"
"அதுக்காக இருந்த பத்து பேரையும் கட்சியிலிருந்து நீக்கியது சரியில்லை"
-எஸ் பழனிவேல்

மனோகரியின் கண்ணெதில் கண்ணீர் காய்ந்து போயிருந்தது. இப்போது அவள் அழவில்லை. ரொம்பத் தெளிவாகவே பேசினாள். மனோகருக்கு ஏதோ கொஞ்சம் புரிந்த மாதிரி இருந்தது. இது ஏதோ அத்தானுடைய அலுவலகம் சம்பந்தப்பட்ட பிடுங்கல் என்று தோன்றியது.

''அத்தான் பத்திரிகையிலே வேலை பார்க்கிறதுனாலே, அத்தானைத் தேடி நாலு பேர் வரத்தான் செய்வாங்க. அதிலே இது பொண்ணா இருந்துட்டுது. இதிலே என்ன தப்பு இருக்கு?''

''என்ன தப்பு இருக்காவா? ஆஃபீஸ் சம்பந்தப்பட்ட வேலைன்னா ஆஃபீஸுக்குத்தானே போகணும்? வீட்டுக்குத் தேடித் தேடி எதுக்கு வரணும்?''

''நம்ம வீட்டுக்குப் பக்கத்திலேயே அவளுக்கும் வீடுன்னு சொன்னியே? அதனாலே

வீட்டுக்கே வர்றா போலிருக்கு...''

''தொட்டுத் தொட்டுப் பேசுறது எல்லாம் ஒண்ணுமே இல்லைங்கிறியா?''

''ஐயோ அக்கா, நீ இன்னும் அந்தக் காலத்து மனுஷியாகவே இருக்கியே... இத்தனைக்கும் நீயும் ஒரு நாலு ஆண்கள் வேலை பார்க்கிற இடத்திலேதான் வேலை பார்க்கறே... வேலை பார்க்கிற இடத்திலே ஆணும் பொண்ணும் கைகுலுக்கிக்கிறது, தொட்டுத் தொட்டுப் பேசுறது இதெல்லாம் சகஜம் அக்கா...''

''அவங்ககிட்டே அவ எவ்வளவு உரிமை எடுத்துக்கிட்டறாங்கிறதை நீ நேரிலே பார்த்தாத்தான் தெரியும்...''

''சரி, அவனை உனக்குப் பிடிக் கலைங்கிறது அத் தானுக்கு எப்படித் தெரியும்?''

''அதுதான் தினசரி சத்தம் போடுதேனே... தெரியாமே என்ன? என்னை விட அவ வேண்டியதிருக்கு...''

''சரி... நான் இதைப் பத்தி அத்தான்கிட்டே பேசு தேன்.''

''அதெல்லாம் ஒண்ணும் வேண்டாம். ஒன்கிட்டே எதுக்குச் சொன்னேன்னு அதுக்கு வேற சண்டை வரும். இந்தப் பிள்ளைகளுக்கு ஆனுவல் லீவு விடட்டும்னு இருக்கேன். லீவு விட்டாச்சன்னா அதுகளைக் கூட்டிட்டு ஊருக்குக் கிளம்பிருவேன்.''

''இதெல்லாம் வெளியே தெரிஞ்சா எவ்வளவு கேவலம்?''

''ஏன் உங்க அத்தானுக்கு இல்லாத, தெரியாத கேவலமா புதுசா வந்துரப் போவுது?'' என்று சொல்லிக்கொண்டே எழுந்தாள் மனோகரி. பையை எடுத்துத் தோளில் போட்டுக் கொண்டாள். அவனும் பையை எடுத்துக் கொண்டு எழுந்தான்.

''வா.. போகலாம். வருண் என்ன பண்றானோ?'' என்றாள்.

இருவரும் மௌனமாகவே நடந்தனர். மணல்பரப்பைத் தாண்டி, நடைபாதைக்கு வந்தனர். கடல் அலையின் சத்தம் தேய்ந்து கொண்டே வந்தது. மனோகர் யோசித்துக் கொண்டே அவளுடன் நடந்து கொண்டிருந்தான். மனோகரி திடீரென்று அவன் பக்கம் திரும்பி, ''அத்தான்கிட்டே ஒன்னும் கேக்க வேண்டாம். இது நமக்குள்ளேயே இருக்கட்டும்...''

அவன் பதில் எதுவும் சொல்லவில்லை. மௌனமாக அவளுடன் நடந்து கொண் டிருந்தான். ''மாம்பலம் போய் அங்கே இருந்து ட்ரெய்ன்லே போயிரலாம்'' என்று சொல்லிக் கொண்டே ஒரு ஆட்டோவை நிறுத்தினான்.

(தொடரும்)



## நான்காவது முறையா...

கோன் பனேகா க்ரோர்பதி 4ஐ மீண்டும் அமிதாப் நடத்தப் போகிறார். 2011 ஆரம்பத்தில் சோனி டி.வி.யில் துவங்கப் போகுது கேபிசி 4. கேபிசி முதல் இரண்டு நிகழ்ச்சிகளைப் போல், இதுவும் தான் கிளப்பும் என்ற எதிர்பார்ப்பு, ஜுரம் போல் ஏறிக் கொண்டிருக்கிறது.

- ஆர்.வி.

"வருகிற பொதுத் தேர்தலில் எங்கள்
கட்சிக்கும் 150 இடங்களில்
டெபாசிட் கிடைக்கும் என்று உளவுத் துறை
ரிப்போர்ட் கூறுகிறது. இதிலிருந்தே
எங்கள் கட்சியின் செல்வாக்கு
என்னன்னு தெரியவில்லையா?"

-அதிரை புகாரி

''புதுப் படத்தில என்னோட 'ரீமிக்ஸ்' பாட்டு எப்படி?''

''சும்மா 'கலக்கிட்டீங்க' சார்!''

- வெ.சீதாராமன்



''டாக்டர்! நடந்து போனால் யாரோ என் பின்னால் வர்ற மாதிரியே ஒரு ஃபீலிங் வருது டாக்டர்.''

''நான்தான் அது. என் ஃபீஸைக் கொடுத்திடுங்க. அப்புறம் நான் வர மாட்டேன்!''

-எம்.அசோக்ராஜா



# கண்டிப்பா வேணும்... டைமிங் சென்ஸ்!

"சங்கோஜப்படாம கேட்டுச் சாப்பிடுங்க, இது 'உங்க' வீடு மாதிரி...!"

"சந்தோஷம் மாமா, வீட்டு 'ரிஜிஸ்ட்ரேஷனை' எப்ப வெச் சிக்கலாம்?"

- வெ.சீதாராமன்





"டைமிங் சென்ஸ் என்றால் என்ன?"

"நரைக்க ஆரம்பிச்சதுமே தலைக்கு டை அடிக்கப் பழகுறதுதான்..."

- அ.யாழினி பர்வதம்



"ஸ்வாமி, நீங்க தவத்தில் இருந்தப்ப அதைக் கலைக்க அழகுப் பெண் ஒருத்தி வந்தாள். நான்தான் விரட்டிட்டேன்..."

"மூடனே.. நான் தவம் செய்ததே அவள் வரணும்னுதானேடா?"

- எம்.அசோக்ராஜா

''போற்றிஎன் வாழ்முத லாகிய பொருளே/புலர்ந்தது பூங்கழற் கிணைதுணை மலர்கொண்டு/ஏற்றிநின் திருமுகத் தெமக்கருள் மலரும்/எழில்நகை கொண்டுநின் திருவடி தொழுகோம்...'' கணீரெனப் பெண் குரல். உறங்கும் விழிகளை மலரச் செய்யும் இனிமை. ஆலயத்தின் உள்ளே பள்ளியறை முன்பாக, காலை நேரத்தில் தினசரி ஒலிக்கும் திருப்பள்ளியெழுச்சிப் பாடல்.

திருச்சி, உறையூர் பஞ்சவர்ணேசுவர சுவாமி திருக்கோயிலின் ஓதுவார் அங்கயற்கண்ணி. தினசரி, காலை வேளைகளில் அவரது இனிய குரல் கேட்டுத்தான், சுவாமியும் அம்பாளும் திருவிழிகள் திறந்து துயில் கலைகின்றனராம்! தமிழகத்தின் முதல் பெண் ஓதுவார் என்கிற சிறப்பும் அவருக்கு உண்டு.

"ஆதிதிராவிடர் சமூகத்தில் பிறந்த எனக்கு வாழ்வில் கிடைத்தற்கரிய பெரும் பேறு இது! இதற்கென நான் கடந்து வந்த பாதை கடினமானது. ஒரு தலித்துக்கு, ஆலயத்தில் ஓதுவார் பணி என்பது கனவிலும் நான் கண்டிராதது!" என்கிறார் அங்கயற்கண்ணி.

''நான் பொறந்து வளர்ந்தது எல்லாமே செம்பட்டு, அங்காளம்மன் கோயில் தெருவுலதான். தெனசரி சாயந்திர வேளைகள்ல அங்காளம்மன் கோயில்ல, பெரியவர் ஒருவர் பக்திப் பாடல்களை ராகம் போட்டுப் பாடிட்டு இருப்பார். அவர் பக்கத்துல போயி நானும் உக்காந்துக்குவேன். பாடுறதைக் கேட்பேன். அப்ப எனக்கு ஆறேழு வயசிருக்கும்.

பல நாள் என்னைக் கவனிச்சவரு, சில பக்திப் பாடல்களை ராகமாப் பாடக் கத்துக் கொடுத்தாரு. அப்ப நான் நெனைக்கலை. பின்னாடி நானும் ஒரு கோயில்ல நின்னு பாடுவேன்னு. ரொம்பக் கஷ்டத்துலயும் ப்ளஸ்டூ வரைக்கும் படிச்சு பாஸ் பண்ணினேன். கல்லூரிக்குச் சென்று படிக்க நான் ஆசைப்பட்டாலும், வீட்ல படிக்க வைக்க முடியலை. அப்பா சுப்ரமணியன் தோல் பதனிடும் கூலித் தொழிலாளி, ரொம்பக் கஷ்டம். என்



# ஆலயத்தில் பெண் ஓதுவார்!



**நான்கு ஆண்டுகளாக மாதம் ஆயிரத்தைந்நூறு ரூபாய் ஊதியத்தில், பல பொருளாதாரச் சிரமங்களுக்கு மத்தியில் ஓதுவாராகப் பணியாற்றி வருகிறேன்!**

உடன்பிறப்புகள் மூணு ஆண்கள், இரண்டு பெண்கள்.

கோயில்ல பாட்டுக் கத்துத் தந்த பெரியவரு, 'திருச்சியில அரசு இசைப் பள்ளி ஒண்ணு இருக்கு. அங்கே கட்டணம் ஏதும் கிடையாது. அங்கே சேர்ந்து பாட்டுக் கத்துக்க. நான் சேர்த்து வுடுறேன்!'ன்னு சொன்னாரு. அவரோட வழி காட்டுதல்ல அந்த இசைப் பள்ளியில சேர்ந்தேன். மாவட்ட அரசு இசைப் பள்ளியில தேவார ஆசிரியர் சரவணமாணிக்கம், எனக்கு மிகச் சிறந்த குருவாக அமைஞ்சாரு.

திருமுறை வகுப்பு. மூன்று வருடப் படிப்பு. பஞ்சபுராணம் எனச் சொல்லப்படும் தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, பெரிய புராணம் போன்றவைகளில் இருந்து முக்கியப் பாக்கள் பாடங்களாக அமையப் பெற்றிருந்தது.

2004-ல் சிறப்புத் தேர்ச்சி பெற்றாலும், இரண்டு வருடங்கள் வேலையின்றிச் சிரமப்பட்டேன். தமிழக அரசின் இந்து சமய அறநிலைய ஆட்சித் துறை சார்பாக 2006-ல் ஓதுவாராகப் பணியமர்த்தப்பட்டேன். என் போன்ற பெண்கள் பலரும் ஓதுவார் தேர்ச்சி பெற்று, பணிக்கெனக் காத்திருக்கின்றனர். நான்கு ஆண்டுகளாக மாதம் ஆயிரத்தைந்நூறு ரூபாய் ஊதியத்தில், பல பொருளாதாரச் சிரமங்களுக்கு மத்தியில் ஓதுவாராகப் பணியாற்றி வருகிறேன்!'' என்கிறார் அவர். நிறைய ஓதுவார்களை நியமித்துக் கொஞ்சம் சம்பளத்தை உயர்த்தச் சொல்லி, செம்மொழியின் அசல் பிம்பம் ஆலயங்களில் ஒலிக்கச் செய்ய அரசின் காதில் ஓதுவோம்.

**- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**





இன்றைக்கு என்னவோ
இவ்வளவு கூட்டம்!
நம் எல்லோருக்கும் பாஸ்
கிடைக்க வேண்டிக்கொள்ளுங்கள்"
என பஞ்சாபியில் சொல்லுவது
நமக்கு கேட்கிறது.
மெல்லப் பனி விலகி
வெளிச்சப் பரவிக் கொண்டிருக்கும்
அந்தக் காலைப் பொழுதில்...





அந்த இடம் மிகவும் பரபரப்பாக இயங்கிக் கொண்டிருக்கிறது. இந்தியாவின் பல பகுதிகளிலிருந்தும் வந்திருக்கும் புலதரப்பட்ட மக்கள், பெரும்பாலும் குடும்பங்கள். எல்லோர் முகத்திலும் ஏதோ ஒரு எதிர்பார்ப்பு படிந்திருக்கிறது. எல்லாக் கோயில் நகரங்களையும் போல மொய்க்கும் சிறு வியாபாரிகள் கூட்டம்; ஒலிபெருக்கியில் புரியாத அறிவிப்புகள். ஜம்முவிலிருந்து ஐம்பது கி.மீ. தொலைவிலிருக்கும் கத்ரா நகரின் பஸ் நிலையத்துக்கு அருகே. 'தேவி அழைத்தால் மட்டுமே தரிசிக்க வாய்ப்பு கிட்டும்' என நம்பப்படும், ஆண்டுக்கு ஐம்பது லட்சம் பக்தர்களை ஈர்க்கும் வைஷ்ணோ தேவி கோவிலுக்குச் செல்ல, அதன் முதல் கட்டமான கத்ரா நுழைவாயிலருகில் குவிந்திருக்கும் அந்தக் கூட்டத்தில் நின்று கொண்டிருக்கிறோம்.

இமயத்தின் மடியில், திரிகூட மலைச் சரிவில் 5200 அடி உயரத்திலிருக்கும் இந்தக் கோயிலுக்குப் போகும் பாதை இங்கிருந்துதான் துவங்குகிறது. இங்கு வழங்கப்படும் அனுமதிச்சீட்டு இல்லாமல், யாரும் மேலே போக முடியாது. பக்தர்கள் இங்கு பதிவு செய்து கொள்ள வேண்டும்;

ரமணன்

இலவசமாக வழங்கப்படும் இந்த அனுமதிச் சீட்டு பெற்றவர்களுக்கு, ஒரு லட்சம் ரூபாய் இன்ஷூரன்ஸ் பாதுகாப்பு உண்டு. இந்த ரிஜிஸ்ட்ரேஷன் கவுண்ட்டர் கணினிமயமாக்கப்பட்டிருப்பதால், பிரமாதமாக நிர்வகிக்கிறார்கள். அதிகபட்சம் இருபத்திரண்டாயிரம் பேர்தான் மலையில் இருக்க முடியுமாதலால், தரிசனம் செய்து திரும்பியவர்களின் எண்ணிக்கைக்கு இணையாக மட்டுமே புதிய அனுமதிச் சீட்டுகள் வழங்கப்படுகின்றன. அதனால் எப்போதும் கூட்டம் காத்திருக்கிறது. மூன்று இடங்களில் தீவிர சோதனைகளுக்குப்பின் நடந்தோ, குதிரையிலோ, பல்லக்கிலோ போவதற்கு வசதியாக அமைக்கப்பட்டிருக்கும் அந்த 12 கி.மீ. பாதையில், மலைப்பயணம் துவங்குகிறது. பெரும்பாலான இடங்களில் மேற்கூரையிடப்பட்டிருக்கும் அந்த நீண்ட பாதையில், தாத்தாவின் கைபிடித்து நடக்கும் பேரன்கள், அணி அணியாகச் செல்லும் பக்தர் குழுக்கள், குடும்பங்கள், உரசிக் கொண்டு போகும் குதிரைகள் - இவர்களுக்கிடையே நாமும் மெல்லச் செல்லுகிறோம். மலையில் பயன்படுத்தும் அத்தனைப் பொருட்களும் கீழிருந்துதான் போகவேண்டுமாதலால், அவற்றை அனாயாசமாகத் தூக்கிக்கொண்டு வேகமாகச் செல்லும் கூலிகளுக்கும் இதே பாதைதான். வழியில், சில சின்னக் கிராமங்கள், கோயில் நிர்வாகத்தில் நன்கு பராமரிக்கப்படும் போஜனாலயங்களில் மலிவான விலையில் சாப்பாடு, ஓய்வெடுக்கக் கூடங்கள் எனப் பல வசதிகள்... ஜம்முவிலிருந்து இப்போது ஹெலிகாப்டர் வசதியிருக்கிறது என்ற விவரம், வழியில் பார்க்கும் அந்த ஹெலிபேட் மூலம் தெரிகிறது. பிளாஸ்டிக் பொருட்களுக்குத் தடை; தொடர்ந்து செய்யப்படும் துப்புரவுப்பணி ஆகியவற்றால் பாதை முழுவதும் படுசுத்தமாகயிருப்பது சந்தோஷத்தைத் தருகிறது. சிவபெருமானை அடைய வேண்டி பார்வதி தேவி தன் உருவத்தை மறைத்துக் கடும்தவம் செய்ததும், தவத்தைக் கலைக்க முயற்சித்த காலபைரவனைக் காளிவடிவம் எடுத்து அழித்ததாகவும் புராணம். பிரதானக் கோயிலின் முகப்புக்கு 1 கி.மீ. தூரத்தில் 'சன்னதியில் தேவி' தன்னை மூன்று பிண்டிகளாக (சுயம்புக்களாக) வெளிப்படுத்திக் கொண்டிருக்கிறார். சிலைகளோ அல்லது மூர்த்திகளோ கிடையாது. எனவே கர்ப்பகிரஹத்தில் நுழைந்தவுடன் 'அந்தப் பிண்டிகளை கவனமாகப் பாருங்கள்' என்ற அறிவிப்பு காணப்படும் அந்த இடம் பரபரப்பாக இருக்கிறது. நீண்ட ஆறு மணி நேரப் பயணத்துக்கு பிறகு, கோயிலின் முகப்பிலிருக்கும் மிகப் பெரிய கூடம். இங்கு மீண்டும் சோதனைகளுக்குப் பின்னர், நமது அனுமதிச் சீட்டுக்கான குரூப் எண்ணைப் பெற்று, வரிசையில் காத்திருக்கும்போதுதான், கால்வலிப்பதை உணர முடிகிறது. குளோஸ் சர்க்யூட் டி.வி.யில் காட்டப்படும் விபரங்களிலிருந்து, எந்த குரூப் சன்னிதி வரை அனுமதிக்கப்பட்டிருக்கிறது என்பது தெரிவதால், நமது முறை வரும் நேரத்தைக் கணக்கிட்டுக் கொண்டிருக்கிறோம்.

வரிசையிட்டுச் செல்லும் வழியின் இறுதியில், கண்ணாடிச் சுவர்களாலான அறையில் கொட்டிக் கிடக்கும் கரன்ஸி நோட்டுகளும், காசுகளும் எண்ணப்பட்டுக் கொண்டிருக்கின்றன. அதற்கு அருகில் வரிசையின் இறுதிக் கட்டம். சில மீட்டர் தூரத்தில்


120 கிலோ தங்கத்தால் ஆன சிம்மாசனம்!

சன்னிதி. மீண்டும் ஒரு சோதனை. சில காலம் முன்வரை தவழ்ந்து செல்ல வேண்டிய குகையாகயிருந்ததை, இப்போது பாதையாக மாற்றியிருக்கிறார்கள். நுழைந்தவுடன் சில்லிடும் ஏசி அறை போல் மெல்லிய குளிர், காலடியில் கடந்துசெல்லும் சுனை நீர். வரிசை மெல்ல நகர்கிறது.

அந்த நீண்ட பாதையின் கடைசியிலிருக்கும் திருப்பத்தில், ஒரு சிறு குகை; அதில்தான் சன்னிதி; அடுத்தவரின் கழுத்து இடுக்கு வழியாகப் பார்த்துக் கொண்டே அருகில் வந்த சில வினாடிகளுக்குள் அவசரப்படுத்துகிறார்கள். சரியாகப் பார்ப்பதற்குள் நமது தலையில் கையை வைத்து (சற்றுப் பலமாகவே) ஆசிர்வதித்து அனுப்பிவிடுகிறார்கள். நுழைந்த மாதிரியே மற்றொரு நீண்ட பாதை வழியாக வெளியே வருகிறோம். **''கவலைப்படாதே! அந்த நொடியில் அருள் பாலிக்கத்தான் தேவி உன்னை அழைத்திருக்கிறாள்''** என்று ஆங்கிலத்தில் யாரோ, யாருக்கோ சொல்வது நம் காதில் விழுகிறது.




---

# டி.பி.எல். டி20!

**''அதிரடி ஐ.பி.எல் டி-20க்கு ஜெராக்ஸ் எடுத்தாப்ல ஒரு மேட்ச் நடத்தணும். அது நம்ம மாவட்டத் தலைநகர்ல நிகழ்த்தணும். கிராமப்புற கிரிக்கெட் ஆர்வமுள்ள இளைஞர்களை வெளிச் சத்துக்கு கொண்டு வரணும் என்கிற கனவு இப்ப நிறைவேறியிருக்கு!'' என்கிறார் வாசன் எஸ்டேட்ஸ் தலைவர் ரவி முருகையா.**

சமீபத்தில் திருச்சியில் டி.பி.எல்.டி-20 போட்டிகள் நடைபெற்றன. திருச்சி ப்ரீமியர் லீக் கிரிக்கெட் போட்டிகள். இருபது ஓவர்கள். எட்டு அணிகள். வாசன் எஸ்டேட்ஸ் திருச்சி ப்ரீமியர் லீக் டி-20 கிரிக்கெட் போட்டியில் ஒவ்வொரு அணிக்கும் வெவ்வேறு நிறுவனங்கள் ஸ்பான்சர்.


ரவி முருகையா

ஒவ்வொரு அணியிலும் நகர்ப்புற, கிராமப்புற விளையாட்டு வீரர்கள். மாநில அளவில் சிறந்து விளங்கும் நான்கு வீரர்கள். இதன் ஒவ்வொரு அணியிலும் பங்கேற்று விளையாடினர் என்பது தனிச்சிறப்பு.

உள்ளூர் கிரிக்கெட் வீரர்களை உற்சாகப் படுத்தும் நோக்கில் நடத்தப்பட்டு இருக்கிறது இந்த டி.பி.எல்.டி-20. தமிழகத்தில் இதுபோன்ற தொடர் போட்டி, மாநிலத்துக்குள் ஒரு மாவட்டத் தலைநகரில் நடைபெற்றுள்ளது இதுவே முதல் முறை என சிலாகிக்கிறார் இதன் அமைப்பாளர் ரவி முருகையா.

**- சரவணன் திரு**



# திருமாவளவன்
## (கனடா)



**து**ளியுமகலாது என்னோடு ஒட்டியபடி அலைகிறது
மனப்பட்சி.
பிடுங்கி வெளியே எறியவும் முடியவில்லை
எப்போதும் என்னை எள்ளி நகையாடுகிறது
கோபம் கொண்டு திட்டித் தீர்க்கிறது
சிலசமயம் பரிகசிக்கிறது
நையப்புடைக்கிறது
பகைவனாய் நின்று எதிர்வாதம் புரிகிறது
ஒவ்வொரு கணமும் என்னை எச்சரிக்கிறது
எனக்காகப் பச்சாதாபப்படுவதும் கண்ணீர் விடுவதுமுண்டு
விடையளிக்க முடியா வினாக்களை எழுப்பி
நான் திகைத்திருக்கும் பொழுதில்
கைகொட்டிச் சிரிக்கிறது
தன்வழிச்செல்லென அடம்பிடிக்கிறது
பணியமறுத்து என்வழிச்சென்றால்
எனக்கான பொறியை அதுவே தயார் செய்கிறது
எப்போதாகிலும் அரிதாய் ஒரு பொழுதில்
என்முதுகில் தட்டிக்கொடுத்துப் பெருமிதங்கொள்கிறது

அத்துளிப் பொழுதுக்காகவேனும்
பாழாய்போன வாழ்க்கையை
வாழ்ந்து தொலைத்துவிடலாம் போலத்தோன்றுகிறது

## ஜெர்மன் மொழியில்: கிறிஸ்டியன் ஜெல்லெர்ட்

மனுஷனுக்கு, எந்த சமயத்துல எந்த ரூபத்துல எத்தினி விதமா பிரச்னை தலைதூக்கும்னு எவனுக் குத் தெரியும்? இருந்தாலும், நாம செய்யவேண்டியது என்னன்னா பிரச்னையோட வேருக்கே போய்ப் பாக்கணும். நமக்கு வர்ற ஆபத்துக்களைப் பத்தி நாம நீர ஆராய்ஞ்சி தெரிஞ் சிக்கிட்டா, அதெல்லாம் மறுபடி வர்றதுக்கு முன்னாலேயே உஷார் ஆயிடலாம்.

சல்பிசியா ஒரு அழகான பொண்ணு. அவனோட புருஷன்காரனுக்கு அவன்னா உசுரு. ஒரு நாளு தன்னோட சிநேகிதிய பார்த்துட்டு வர்றன்னு போனா. போவும் போது என்னவோ நல்லாதான் போனா. வரும்போது என்ன ஆச்சின்னு தெரியல, குத்துயிரும் கொலயுயிருமா வந்து சேர்ந்தா. வந்ததும் வராததுமா படுக்கையில போயி பொத்துன்னு விழுந்தா. ரத்த ஓட்டம் திடீர்ன்னு

# நோய்



நின்னு போச்சோ? மூணு ஜோடி கைங்க அவ போட்டிருந்த உடுப்புகள தளர்த்துச்சு. நல்ல வேளையா அங்க மூணு பேர்தான் அப்போ இருந்தாங்க.

பாவம் அவனோட புருஷன்காரன். வெள்ளப் பெருக்கு மாதிரி அவனோட கண்ணுல இருந்து வழிஞ்ச கண்ணீருல அவனே கரைஞ்சு போனான். அந்த மாதிரியான ஒரு சூழ்நிலையில யாருதான் அப்படி அழ மாட்டாங்க! கல்யாணம் ஆயி ஒரு வருஷந்தான் ஆச்சு. அதுக்குள்ள கட்டின பொண்டாட்டிய எமங்கிட்ட வாரிக்கொடுக்கணும்னா, அதுவும்

# பிறமொழிக்கதை

## 11

### தமிழில்: ராஜ்ஜா




இவ்வளவு சீக்கிரமாவா? அதனால உடனே போய் ஒரு மருத்துவரைக் கூட்டிக்கிட்டு வரச்சொல்லி ஆள் அனுப்பிவெச்சான்.

சின்ன வயசுப்புள்ளயா ஒருத்தரு மேனா மினுக்கியா வந்து சேர்ந்தாரு. நோயாளியோட படுக்கையில ஓரமா ஒக்காந்திக்கிட்டாரு. பார்த்த உடனே அந்த பொண்ணுக்கு என்ன நோவு வந்திருக்கு, அதுக்கு சரியான மருந்து எதுன்னு எல்லாம் தெரிஞ்சவரைப்போல பாவ்லா பண்ணாரு. அந்த பொண்ணோட கையப் புடிச்சி நாடி பார்த்தாரு. இந்த மாதிரியான நோவுக்கு, அவுரு படிச்ச மருத்துவ புஸ்தகங்கள்ல என்ன மருந்து சொல்லப்படுதுன்னு தன்னோட மனக்கண்ணாலேயே பார்த்தாரு.

பேனாவும் மையும் கொண்டுவாங்கன்னு கட்டளை போட்டாரு. வந்த உடனே மருந்தோட பேரை எழுதிக்குடுத்து உடனே போயி வாங்கிவரச் சொன்னாரு. வாங்கி வர ஆள் போனதுமே, தன்னோட பொண்டாட்டிக்கு என்னதான் ஆச்சின்னு அந்த புருஷன்காரன் மருத்துவரைப் பார்த்துக் கேட்டான்.

"என்னென்னு தெரியணுமா? உங்கிட்ட சொல்லாம வேற யாரு கிட்ட சொல்றது? எல்லாம் புதுசா கல்யாணம் ஆன பொண்ணுங்க, தனக்கு என்னமோ ஆயிப் போச்சுன்னு நினைச்சுக்கிட்டு பதறிப்போற நல்ல சேதிதான்". அந்த மருத்துவன் சிரிச்சுக்கிட்டே சொன்னான்.

இந்த சேதிய கேட்ட புருஷன் காரனுக்கு சந்தோஷம் தாளல.

அன்னைக்கு ராத்திரி போச்சு.

சொன்னான். இவன் வந்தான். அவளுக்கு பெரியம்மை காணப்போவதா சொல்றானேன்னு விரக்தியடைஞ்சி போனான் அந்தப் புருஷன்காரன்.

"டேய், டேய் நிறுத்துங்கடா, போக்கத்த மருத்துவனுங்களா! இனி நீங்க ஒன்னும் சொல்ல வேணாம். உங்க ரெண்டு பேருல ஒருத்தன் சொன்னது தப்பாத்தான் இருக்



## இது எனக்கு எவ்ளோ அழகா இருக்குன்னு உங்களுக்கு காட்டறேன்

கும். என் பொண்டாட்டி இயற்கையாவே குணமாவட்டும். அவ நல்லா தூங்கி ஓய்வெடுத்தாலே போதும். எல்லாம் சரியாயிடும். அவளுக்கு வந்திருக்கிற நோய் எவ்வளோ மோசமானதா இருந்தாலும் பரவாயில்ல. நோயைவிட ரெண்டு மடங்கு மோசமானவனுங்க நீங்கதான்டா. போய் சேருங்கடா எப்பா''ன்னு சொல்லி அந்த ரெண்டும்கெட்டான் மருத்துவனுங்கள அனுப்பிவெச்சான்.

பொறுமையாதான் இருக்கணும். எல்லாம் இன்னைக்குள்ள குணமாயிடும்.. அப்படின்னு நினைச்சுக்கிட்டு அவன் தன்னோட பொண்டாட்டி பக்கத்துலயே ஒக்காந்திகிட்டு இருந்தான்.

ஒரு அரை மணி நேரம்கூட ஆகியிருக்காது. அதுக்குள்ள "இப்ப எப்படி? கொஞ்சம் பரவாயில்லியா?''ன்னு ஒரு

நோயாளிக்கு குறிப்பிட்ட வேளையில குறிப்பிட்ட நேரத்துக்கு மருந்து கொடுத்துக்கிட்டே இருந்தாங்க. ஆனா ஒரு பிரயோஜனமும் இல்ல. அதனால இன்னொரு மருத்துவரைக் கூப்பிட வேண்டியதாப்போச்சு.

பொறுமையா கேளுங்க. ரெண்டாவதா வந்த மருத்துவரு, அந்தப் பொண்ணுக்கு என்ன நோவு கண்டிருக்குன்னு சிரமப்பட்டுக் கண்டுபிடிச்சிட்டாரு. அதுல அவருக்கு எந்தவிதமான சந்தேகமும் இல்ல. அதாவது அந்தப் பொண்ணுக்கு பெரியம்மை நோய் வரப்போவதாகச் சொன்னாரு.

அடடே! என்னடா இவனுங்க! ஒருத்தன் வந்தான். சல்பிசியா தாயாவப்போவதா

நூறு தடவையாவது கேட்டிருப்பான். அதனால என்ன புரோஜனம்? இப்படி கேள்வி கேட்டுக்கிட்டே இருந்தா அவ என்ன கதியாவறது?

அவளும் மூச்சுத் திணறித் திணறி பேசினா. அவ பேசறதிலிருந்து அவளுக்கு இருக்க இருக்க நோய் வலுத்துக்கிட்டிருக்கிறது தெரிஞ்சுது. பாவம் அந்தப் பொண்ணு! அவளுக்கு எமன் ரொம்பக் கிட்டத்துல வந்துட்டானோ? அவ படற கஷ்டத்தப் பார்த்தா, அவ சீக்கிரமாவே போய்ச் சேர்ந்துட்டாக்கூட பரவாயில்லையேன்னு தோணுச்சு.

அட கேளு! கேளு! கதவை தட்ற சத்தம் கேட்குதா? யாரு? இன்னொரு மருத்துவனோ!

இல்ல... இல்ல... தையல்காரன்தான்! புதுசா தச்ச உடுப்பு ஒன்ன எடுத்துக்கிட்டு வந்திருக்கான். ஆஹா! சரியான நேரத்துக்கு வந்திருக்கான்யா.

''அது எதுக்கு! என் பொணத்து மேல போடறதுக்கா?'' அந்த பொண்ணு திணறித் திணறிக் கேட்டா. ''அய்யோ! இந்த உடுப்பு மாதிரி நானும் வெளுத்துப் போயில்ல தெரிவேன். ஆண்டவன் என்னை இன்னும் கொஞ்ச நாளைக்கு வாழ விட்டான்னா, அதே மாதிரி துணி எடுத்துக் கொடுத்து, அதே மாதிரி உடுப்பு தைக்கச் சொல்லியிருப்பனே! இந்த தையக்காரனுக்கு அதை எப்படி தைக்கறதுன்னு நல்லாவே தெரியும். என்னோட சிநேகிதிக்கும் இவன்தான் தைச்சு குடுத்திருக்கான். நான் இதுவரைக்கும் அதைப்போல ஒரு அழகான உடுப்பை எங்கியுமே பார்த்ததில்ல. நான் போன தடவை அவளெ பார்க்கப் போயிருந்தனே, அப்ப அவ அதைதான் உடுத்தியிருந்தா. அய்யோ! வாழற காலம் ரொம்ப சொற்பமா போச்சே. எல்லாம் மாயை தானா!''

சோகமே உருவாகிப்போன புருஷன் காரனுக்கு இப்போ கொஞ்சம் தெம்பு வந்திடுச்சு. ஆஹா! புது உடுப்பைப் பத்தி பேசும்போது மட்டும் திணறாம பேசறாளே! நம்பிக்கை இழக்கப்படாது. இவளை எப்படியும் தேத்திடலாம்னு ஒரு முடிவுக்கு வந்தான்.

தையக்காரன் அறைய விட்டு வெளியே போவும்போது, இந்த புருஷங்காரனும் அவன் கூடவே போனான். அறைக் கதவை வெளியே சாத்திக்கிட்டு ரெண்டு பேரும் ரகசியமா பேசிக்கிட்டாளுங்க. தையக்காரன் வாய்கிழிய சத்தியமெல்லாம் பண்ணிட்டு சத்தியத்தை காப்பாத்த வேகமா போனான்.

பொழுது சாயறதுக்கு முன்னயே தையக்காரன் திரும்பி வந்தான். நேரா சல்பிசியா இருந்த அறைக்கு போனான். அவனை பார்த்ததுமே படுக்கையில கிடந்தவளுக்கு குதூகலம். மனதார நன்றி சொன்னா.

அப்பிடி அந்த தையக்காரன் என்னதான் கொண்டு வந்து இருந்தான்?

துணியில சுத்தி வெச்சிருந்த எதையோ அவசர அவசரமா பிரிச்சான். ஆஹா! என்ன கண்கொள்ளா காட்சிடா அது? அதே துணி. அதே மாதிரியா தைக்கப்பட்ட உடுப்பு. அவளோட சிநேகிதி போட்டிருந்த உடுப்பு மாதிரி கொஞ்சம்கூட மாற்றம் இல்லாம.

அதுசரி... அந்த உடுப்பு அங்க என்னா பண்ணுது? அத





"இந்தக் கோர்ட்ல நீங்கள் சொல்ல விரும்புவதைத் தைரியமாகச் சொல்லலாம்!"
"வரவர என் சம்சாரத்தோட சமையலை வாயிலேயே வைக்க முடியலீங்க எஜமான்!"
எஸ்.கோபாலன்

செருக்கிட்டு நாற்காலியில ஜம்முன்னு ஒக்காந்திக்கிட்டு காபி குடிச்சா.

அப்பாடா! ஒரு வழியா அவளுக்கு இருந்த நோயோட அறிகுறியே தெரியாம போயிடுச்சு. அவளைப் போட்டு வாட்டியதெல்லாம் ஒரு உடுப்புதான். அவளுக்கு வந்த நோய்க்கு நிவாரணமும் உடுப்புதான். மருத்துவனுங்களால குணப்படுத்த முடியாததை ஒரு தையக்காரன் குணப்படுத்திட்டான் பாருங்க.

**"அவளைப் போட்டு வாட்டியதெல்லாம் ஒரு உடுப்புதான். அவளுக்கு வந்த நோய்க்கு நிவாரணமும் உடுப்புதான்."**

போடுவம்னு அந்த பொண்ணு நிச்சயமா நெனைச்சுகூடப் பார்த்திருக்க மாட்டாளே.

"என் கண்ணே! என் மணியே! எங்கிட்ட இருக்கிற எல்லாத்தையும் கொடுத்தாவது உன்னை நான் குணப்படுத்திடுவேன். இப்ப இந்த உடுப்பை போட்டுப்பார்." புருஷங்காரன் சொன்னான்.

அவளோ, "அய்யோ! எனக்குதான் ஒடம்புக்கு ரொம்ப முடியலியே. முடியாதுன்னு சொல்றதுக்குக்கூட எனக்கு தெம்பு இல்லியே. சரி. நான் எப்படியாவது இந்த படுக்கையை விட்டு எழுந்திருச்சிடறேன். இப்பவே இந்த உடுப்பைப் போட்டு, இது எனக்கு எவ்ளோ அழகா இருக்குன்னு உங்களுக்கு காட்டறேன்"ன்னு சொன்னா.

ஒரு திரையைக் கொண்டு வந்தாங்க. அந்த பாவப்பட்ட பொண்ணு ஏதோ ஒரு வருஷமா படுக்கையில விழுந்து கெடந்த மாதிரி, ரொம்ப தட்டுத் தடுமாறி எழுந்திரிச்சா. உடுப்பைப் போட்டுக்கிட்டு எல்லாம் சரி



"நம்ம அபிமான நடிகரோட படத்தை உலகத் திரைப்பட ஆராய்ச்சிக்காரங்கத் தேர்வு செய்திருக்காங்களே... ஏன்?"

"ஒரு படம் எப்படியெல்லாம் இருக்கக்கூடாதுன்றதுக்கு சரியான உதாரணமா நம்ம நடிகர் படம் இருக்காம்!"

- மதுரை முருகேசன்

**கண்ணதாச தாசன் கவிதைகள் - சித்ரா பதிப்பகம், அல்சூர், பெங்களூர் - 560 008 விலை : 60/-**

காலத்தால் அழிக்க முடியாத திரைப்படப் பாடல்களை வழங்கியவர் கவியரசு கண்ணதாசன். அவருக்கு ஏராளமான 'தாசன்'கள். பெங்களூரைச் சேர்ந்த கண்ணதாச தாசன், பழைய திராவிட நாட்டுக் கவிஞர்கள் போல நாடு, சான்றோர், இயற்கை, தத்துவம் என... எளிய கவிதைகளை வழங்கியிருக்கிறார். இன்றைய தமிழ்க்கவிதையின் தளம் நவீனத்துக்கேற்றபடி தன்னை மாற்றிக் கொண்டது. சொல்லும் பொருளின் வடிவமும் வார்த்தைகளும் கணினி யுகத்துக்கு மாறிவிட்டன. இருந்தாலும், 'நீங்கள் கேட்டவை' பாணியில் இதிலுள்ள வரிகளை ரசிக்கலாம். அசை போடலாம்.










**தினம் தினம் திருநாளே! - பாகம் - 2 மஹாரண்யம் ஸ்ரீஸ்ரீ முரளீதர ஸ்வாமிஜி, விகடன் பிரசுரம், சென்னை - 2 விலை: ரூ.70**

'இந்த நாள் இனிய நாள்' என்று வருகின்ற நாட்களை மங்களகரமாக வரவேற்பதில் மகிழ்பவர்கள் நாம். மஹாரண்யம் ஸ்ரீஸ்ரீ முரளீதர ஸ்வாமிஜி இறையருள் எல்லோருக்கும் உண்டு. எல்லோருக்கும் இறையருளும் கிட்டும் என்பதை வெவ்வேறு புராண, இதிகாச, நடைமுறைச் சம்பவங்கள் மூலம் விளக்குகிறார். இதில், காஞ்சிப் பெரியவர் தொடர்பான ஒரு சம்பவம் அபூர்வமானது.

''காஞ்சிப் பெரியவாள் ஒரு ஊரில் இருந்தபோது, தீபாவளித் திருநாள் வந்தது. தீபாவளிப் பலகாரங்கள் செய்ய ஒரு இடம் தேர்வு செய்யப்பட்டுப் பணிகள் நடந்து வந்தன. ஸ்வாமிகள், வேறொரு இடத்தில் தியானத்தில் இருந்தார். திடீரெனத் தியானம் கலைந்து, பலகாரம் செய்பவர்களை அழைத்து வரச் சொன்னார். எல்லோரும் வந்தாச்சா என்று கேட்டுக் கொண்டு மறுபடியும் தியானத்தில் ஆழ்ந்தார். அவர்கள் பலகாரம் செய்து வந்த கட்டடம் திடீரென இடிந்து விழுந்தது.''

இவ்வாறு, நூல் நிறைய, இறைநிலைத் தத்துவத்தின் சாரம் உணர்ந்து நாமும் மகிழலாம்.

**'தினமலர்' நிறுவனர் 'டி.வி.ஆர்'. நினைவுச் சிறுதைப் போட்டி'யில் பரிசு பெற்ற கதைகள் வசந்தா பிரசுரம், சென்னை - 600 033. விலை ரூ.300/-**

தினமலர் நிறுவனர் டி.வி. ஆர். நினைவுச் சிறுகதைப் போட்டியில் கடந்த 2002 - 2009 வரை பரிசு பெற்ற 65 கதைகளின் தொகுப்பு பிரபல, பிரபலமில்லாத பலரது சிறுகதைகள் - இன்றைய நவீன உலகின் வாழ்வியல் கூறுகளை இயல்பாகப் பிரதிபலிப்பதும் ஒவ்வொரு சிறுகதையும் புதிதான உணர்வுகளை மனதில் தட்டி எழுப்புவதும், குறிப்பிடத் தக்கது. அனைவரும் வாசிக்க வேண்டிய கதைகள்.

- **வசந்த பாரதி**

## "இந்த நாள் இனிய நாள்"

எந்தப் பெரிய இந்திய நகரிலும் பிரிட்டிஷ் ஆட்சியாளர்களை நினைவுபடுத்தும் சின்னமாக ஒரு சிலையோ கட்டிடமோ அல்லது குறைந்தபட்சம் ஒரு கல்வெட்டோ காணப்படுவதில் ஆச்சரியம் இல்லை. ஆனால், இந்தியாவை ஆண்ட இங்கிலாந்து தேசத்தில், மக்களுக்கு உதவ இந்திய மன்னர் ஒருவர் 150 ஆண்டுகளுக்கு முன் அமைத்துத் தந்த ஒரு கிணறு இன்றும் கம்பீரமாக நிற்கும் ஆச்சரியம் தெரியுமா?

இங்கிலாந்து நாட்டின் மேப்பில் பூதக்கண்ணாடி வைத்துத் தேடினால் கூட எளிதில் கண்டுபிடிக்க முடியாத சின்னஞ்சிறு கிராமம் ஸ்டோக் ரோ (Stoke row). புகழ்பெற்ற ஆக்ஸ்போர்ட் பல்கலைக்கழக நகருக்கு அருகிலிருக்கும், 650 பேரே வசிக்கும் குட்டிக் கிராமத்தின் நடுவே, மேன்மை தங்கிய வாரணாசி மன்னர் மக்களுக்கு அளித்த பரிசு என்று பொறிக்கப்பட்ட எழுத்துகளுடன், பளபளக்கும் நீலவண்ண வட்ட வடிவ மேற்கூரையுடன் நிற்கும் அறை. அதன் நடுவே கண்ணாடி மூடியுடன் ஒரு கிணறு. அதன் அருகில் சீராகச் செதுக்கப்பட்ட புல்வெளியிடையே அழைத்துச் செல்லும் பாதையின் முடிவில் அழகான சின்ன வீடு. "ராஜாஸ் வெல்" என்று அழைக்கப்படும் அந்த ஊரின் ஒரே டூரிஸ்ட் அட்ராக்ஷன். அந்த நகர மக்கள் இதன் மூலம் இந்தியாவை அறிந்திருக்கிறார்கள்.

வாரணாசிக்கும் இந்த ஸ்டோக் ரோவுக்கும் என்ன சம்பந்தம்? சென்ற நூற்றாண்டில் இந்திய சுதந்திரப் போராட்டம் துவங்கும் முன், ஒரு ஆங்கிலேய அதிகாரிக்கும், இந்திய மன்னருக்குமிடையே இருந்த ஆழ்ந்த நட்பின் சின்னமிது. எட்வர்ட் ஆண்டர்சன் ரீடே (Edward Anderson Reade) இந்தக் கிராமத்தைச் சேர்ந்தவர். இங்கிலாந்து அரசுப் பணியில் சேர்ந்து இந்தியாவில் 34 ஆண்டு காலம் பணியாற்றியவர். வடமேற்கு இந்தியப் பிரதேசத்துக்குத் துணை கவர்னராகப் பணியாற்றிய பொழுது, அஸிர்முர்க் என்ற கிராமத்தில் 1860-ல் நடைபெற்றுக் கொண்டிருந்த ஒரு கிணறு நிர்மாணிக்கும் பணியைப் பார்வையிட வரும்போது, அருகிலிருக்கும் பனாரஸ் மன்னர் நாராயண சிங்கை சந்திப்பார். அடிக்கடி நிகழ்ந்த சந்திப்பு ஒரு நல்ல நட்பாக மலர்ந்தது. ஒரு நாள் 'தான் சிறுவனாகயிருந்தபோது தண்ணீர்த் தட்டுப்பாடு மிகுந்த தனது கிராமத்தில், தண்ணீர் திருடியதற்காக ஒரு சிறுவன் கடுமையாகத் தண்டிக்கப்பட்ட விஷயத்தை ரீடே மன்னரிடம் சொன்னார். நெகிழ்ந்து போன மன்னர், அந்த நகரில் தான் ஒரு கிணறு வெட்டி உதவ விரும்புவதாகச்

# இங்கிலாந்துக்கு



# பரிசாக ஒரு கிணறு!

சொன்னார். பதவியிலிருந்து ஓய்வுபெற்ற ரீடே தன் ஊருக்குத் திரும்பியதும், மன்னரின் பண உதவியில் தனது மேற்பார்வையில் எழுப்பிய இந்தக் கிணற்றை அரசி விக்டோரியாவின் 45வது பிறந்த நாளன்று பனாரஸ் மன்னரின் பெயருடன் 1864-ல் திறந்து வைத்திருக்கிறார். மொத்த செலவு 353 பவுண்ட்கள்! இந்திய அரசர் ஒருவர் இங்கிலாந்துப் பொதுமக்களுக்காகச் செய்த முதல் தர்மகாரியம் என்ற விஷயம் சரித்திரப்பதிவாகியிருக்கிறது.



● அனந்தநாராயண்சிங்

ஒரு நாளைக்கு எழுநூறு காலன் தண்ணீரை மக்களுக்கு வழங்கிய இந்தக் கிணற்றை நிறுவ மட்டும் மன்னர் உதவவில்லை. இந்தப் பணி தொடர்ந்து நடக்க, நிரந்தரப் பண வசதியும் செய்து தந்திருக்கிறார். கிணற்றின் அருகிலேயே ஒரு நான்கு ஏக்கர் செர்ரிப் பழத்தோட்டத்தை வாங்கி, அதில் கிடைக்கும் விளைபொருளின் வருமானத்தைச் செலவிட சாஸனம் எழுதியிருக்கிறார். கிணற்றைப் பாதுகாத்துப் பராமரிக்கும் வார்டன் தங்க அருகிலேயே வீடும் கட்டியிருக்கிறார். வார்டனுக்கு ஆண்டு சம்பளம் 1 பவுண்ட். செர்ரி நன்றாக விளைந்து 10 பவுண்ட்டுக்குமேல் சம்பாதித்தால், சம்பளம் 2 பவுண்ட் எடுத்துக் கொள்ளலாம் என்கிறது மன்னரின் சாஸனம்.

1981-ல் சார்லஸ் - டயானா திருமணத்தின் போது கிணறு மீண்டும் புதுப்பிக்கப்பட்டிருக்கிறது. கடந்த ஆண்டு இந்த நகரிலிருந்து வந்து இந்தியாவில் சமூகப் பணி செய்யும் கண் மருத்துவர் ஒருவர், தங்கள் நகரின் ஆசிரியர் இந்தக் கிணறு பற்றி எழுதிய புத்தகத்தை இன்றைய வாரணாசியின் மன்னர் அனந்த நாராயண் சிங்கை நேரில் சந்தித்து வழங்கியிருப்பது, ஸ்டோக் ரோ நகர மக்கள் மன்னர் குடும்பத்தினர் மீது வைத்திருக்கும் மரியாதையைக் காட்டுகிறது. இன்றும் இதைப் பிரமாதமாகப் பராமரிக்கிறார்கள். வருகை தரும் இந்தியர்களைப் பார்க்கும் நகர மக்களின் கண்களில் மன்னருக்குத் தெரிவிக்கும் மரியாதை தெரிகிறது. நமக்கும் பெருமையாக இருக்கிறது.



செய்திச் சித்திரம் : **ரமணன்**

"அய்யா... தங்கநாற்கரச் சாலைன்னு சொல்லிக்கறாங்க. ஏதோ தகதகன்னு மின்னுறதா வேற பேசிக்கறாங்க. அதெல்லாம் இருக்கட்டும்ங்க. நாட்டுக்கும் சோத்துக்கும் ஆதாரமான, நீர் மூலமாகிக்கிட்டே போற, எங்க காவிரி டெல்டாவோட நீர்வழிச்சாலைகளை வந்து பாருங்க. அதுக்கு ஒரு விடிவு சொல்லுங்கய்யா!'' என்று அரட்டை அரங்கப் பாணியில் காவிரிப் பாசன விவசாயிகள் பலரிடமிருந்தும் கணைகள் சீறிப் பாய்ந்து வந்தன.


❋ முருகையன்


❋ சாமி நடராஜன்

அவர்களின் கணைகளை நம் ஜோல்னா பைக்குள் இருத்திக் கொண்டு, கல்லணை வழியாகக் கிளம்பினோம்.

**க**ல்லணையிலேர்ந்து பிரிகிறது காவிரி, வெண்ணாறு, கல்லணைக் கால்வாய். இவற்றில் காவிரியும் வெண்ணாறும் பழைய டெல்டா. கல்லணைக் கால்வாய் புதிய டெல்டா. இந்தப் புதியதும், பழையதும், மனித உடம்பில் இரத்தக்குழாய் மற்றும் இரத்தநாளங்கள் போல - ஆறுகள், வாய்க்கால்கள், கால்வாய்கள் எனத் தஞ்சை, நாகை, திருவாரூர்னு மூணு மாவட்டப் பகுதிகள் முழுவதும் பரவியிருக்கிறது.

மொத்தத்தில் இவைகள் பரவலா முறைப்படி தூர் வாரப்படவில்லை. தூர் வாருவதை முழுமையா முடிப்பதும் இல்லை என்று ஒரு குற்றச்சாட்டு. அட... சட்! நம் கண்ணெதிரே வெட்டாறில் தூர் வாரும் வேலை நடந்துக் கொண்டிருப்பதை பனவெளி கிராமத்தில் பார்த்தோம். அதற்குப் பக்கத்து ஊர் நாகத்தி.

''இதெல்லாம்... கண்துடைப்பு தூர் வாரல். எங்க ஊர்ல வந்து பாருங்க தெரியும். இந்த 'பாவ்லா' எல்லாம்!'' என்றார் ஒரு விவசாயி.

அங்கே அந்த அவலத்தைக் காண நேர்ந்தது. ''கோணக்கருங்கல் ஆறுல தூர் வாரப்பட்டிருக்கு. வெட்டாறுல தூர் வாரலை. அதுல தூர் வாரி அஞ்சு வருஷம் ஆவுது. காட்டாமணக்குப்



# காணாமல்

புதர் மண்டி ஆத்தோட பாதி அகலத்துக்கு வெட்டாறு காணாமப் போய்டிச்சி!'' என்கிறார் நாகத்தி கிராம விவசாயி முருகையன்.

''வெண்ணாறிலிருந்து பிரிஞ்ச வர்ற வெட்டாறுல, நெய்வேலி காட்டாமணக்குச் செடி ஆயுள் சந்தாதாரர் போலப் பரவிக் கிடக்குது. ஆறே காணாமப் போய்டிச்சின்னு!'' ஒரு விவசாயியின் குரல் வரும்போதே, ''எங்க ஏரியாவுல ஏரிகளைக் காணோம்னு'' குரல் கேட்டது.

''செங்கிப்பட்டி பக்கத்துல உய்யக்கொண்டான் விரிவு வாய்க்கால், புதிய கட்டளை மேட்டு வாய்க்கால். இதுக ரெண்டுலேர்ந்தும் கால்வாய்ங்க வழியா போற தண்ணி தொண்ணூறு ஏரிகள்ல நிரம்பி, அங்கேர்ந்து பிரிஞ்ச ஐந்தாயிரம் ஏக்கர் சாகுபடிக்குப் பயன்படுது. தொண்ணூறு ஏரிகளும் நாலு வருஷமா தூர் வாரப்படவே இல்லை. ஏதோ அதிசயமா இந்த வருஷம்தான் அதுல பத்து ஏரிகள் மட்டும் தூர் வாரியிருக்காங்க. மீதி என்பது ஏரி இன்னும் கொஞ்ச நாள்ல மேட்டாங்காடாப் போயிரும். வலிமையானவங்க அதுகள பிளாட் போட்டு வித்துருவாங்க!'' என எச்சரிக்கிறார் விவசாயிகள் சங்கப் பிரதிநிதியும், வழக்கறிஞருமான விவசாயி ராயமுண்டான்பட்டி கிராமத்தின் ஜீவகுமார்.



* ஜீவகுமார்



* கக்கரை சுகுமார்

தூர் வாருவது, மார்ச் முதல் வாரம் தொடங்கி மே மாதம் முடிந்திருந்தால், ஜூன் மாதம் மேட்டூர் அணை திறந்தால் கடைமடை வரை தண்ணீர் பாயச் சரியாக இருந்திருக்கும். ஆனால் பணிகள் தொடங்கப்பட்டதே, மே மாதம் இரண்டாவது வாரத்தில்தான் எனச் சொல்லப்படுகிறது. முதல் வாரம் டெண்டர். ரெண்டாவது வாரம் வேலை ஆரம்பம் என்பதால், காவிரி டெல்டாப் பகுதிகளில் அள்ளித் தெளித்தாற்போன்று அங்கொன்றும் இங்கொன்றுமாகத் தூர் வாரும் பணிகள் நடந்து வருகின்றன. இந்தத் தொடக்கம், மிகமிகத் தாமதம் என்கிறார்கள்.

# போகும் கால்வாய்கள்!

"**இ**ளையூர் சிங்கனேரியிலிருந்து பிரிஞ்சு வர்ற வாய்க்காலு நாப்பது கி.மீ. நீளம். வாய்க்கால் சுருங்கி, கரைகள் கரைஞ்சு பெரும்பகுதியான நீளம் காணாமப் போயிடுச்சு. அப்புறம் தண்ணி எப்பிடி வருது? ரெண்டு நாள் மழை பெய்ஞ்சாலே போதும். வாய்க்கால் தண்ணி, ரெண்டு சைடு வயல்கள்லயும் பரவி, இந்த ஏரியாவே வெள்ளக்காடா மாறிடும். காவிரி டெல்டாப் பகுதி பூராவுமே இதுபோன்று சிறுத்துப் போன, சுருங்கிப் போன, காணாமப் போன கால்வாய்கள் ஏராளம். அவைகளைக் கண்டெடுத்து நீர்வழிப் பாதைகளைச் செம்மைப்படுத்துவதே உண்மையான தூர் வாரல்!" எனக் குறிப்பிடுகிறார் தமிழக விவசாயிகள் சங்கத் தஞ்சை மாவட்டத் தலைவர் கக்கரை சுகுமார்.




"**இ**ருநூறு மீட்டர் நீளம் தூர் வாரிட்டு, ஐநூறு மீட்டர் நீளத்துக்குக் கணக்கு காட்ட வாய்ப்பிருக்கு. விவசாயிகள் சார்பா நாங்க என்ன சொல்றோம்னா... தூர் வாரப்படும்போது, அந்தந்தப் பகுதி பாசனதாரர்களில் குறிப்பிட்ட விவசாயிகளைக் கண்காணிப்புக் கமிட்டியில போட்டு, அவுங்க மேற்பார்வையில தூர் வாரணும். இதை எந்த அரசாங்கமும் காதில் வாங்கிக் கொள்வதே இல்லை!" எனச் சொல்கிறார் தமிழ்நாடு விவசாயிகள் சங்கத் தஞ்சை மாவட்டச் செயலாளர் தென்னமநாடு சாமி நடராஜன்.

காவிரி மற்றும் வெண்ணாறிலிருந்து பிரிஞ்சு வர்ற முக்கிய ஆறுகள் முப்பத்தியாறு. இரண்டாயிரத்து தொள்ளாயிரம் கி.மீ. நீளம். இவைகள்லேர்ந்து பிரிஞ்சுப் போற வாய்க்கால்கள் மட்டும் சுமார் முப்பதாயிரம். இதுதாங்க காவிரிப் பாசனப் பகுதியின் நீர்வழிச்சாலைகளின் அளவீட்டுக் குறிப்பு.

கால்வாய்களோட மண்ணும் செங்கல் சூளைகளுக்கெனப் பறிபோகிறது. 'கரையெல்லாம் செண்பகப்பூ' போல 'கரையெல்லாம் செங்கல் சூளை'களா மாறிக் கிடக்கிறது. இவர்களுக்குச் சற்றும் சளைத்தவர்களல்ல என்கிறவிதமாக, விவசாயிகளில் சிலரும், ஆங்காங்கே வாய்க்கால் கரைப் பகுதிகளை வெட்டியும் கரைத்தும், விளைநிலங்களுடன் சேர்த்துக் கொண்டுள்ளனர். விருப்பு வெறுப்பு ஏதுமின்றி மேற்கண்ட ஆக்கிரமிப்புகளை அகற்ற வேண்டும்.

"**கா**விரி தொழில்நுட்பக் குழுத் தலைவர் மோகனகிருஷ்ணன் அறிக்கையின்படி, சுமார் ஆறாயிரம் கோடி ரூபாய்த் திட்டச் செயல்பாட்டில், காவிரி டெல்டா நீர்வழிச் சாலைகள் புனரமைக்கப்படணும். இந்த ஆண்டு அரசு நிதி ஒதுக்கீடு செஞ்சிருப்பது வெறும் ஐந்து கோடி ரூபாய்தான். இந்தத் தொகையில் 'பாவ்லா'வும் 'கண்ணாமூச்சி'யுமே காட்ட முடியும். இது இப்படியே நீண்டால்... விவசாயம் ஸ்தம்பித்து நின்று, உணவுப் பஞ்சம் தலைவிரித்து ஆடும் கோரம், நம் கண்முன் நிகழலாம்" என்கிறார் காவிரி டெல்டா மாவட்டங்களின் விவசாயச் சங்கங்களின் கூட்டமைப்புப் பொதுச் செயலாளர்.

செய்தியும், சித்திரங்களும்:
**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**




திட்டக்குடின்னு டைட்டில் வெச்சதுக்கு ஏத்தபடி, கிராமத்தில் வேலுவின் கதை ஆரம்பிக்கிறது.

வீட்டுக்கு அடங்காத வேலு, ரஜினி ரசிகன். படிப்பு சரியாக வராததால் சிறு வயதிலேயே கொத்தனார் வேலைக்கு சேர்ந்தவன். ஒரு காலக் கட்டத்தில் குடிபோதைக்கும் பெண்கள் சுகத்துக்கும் அடிமையாகிறான். இவனுடைய காமக் கண்களில், தனக்கு வேலை சொல்லிக் கொடுத்த மேஸ்திரியின் மகள் கலைச் செல்வி படுகிறாள். அவளைக் காதலிப்பதுபோல் நடித்துக் கெடுத்து ஏமாற்றி விடுகிறான். ஒரு சந்தர்ப்ப சூழ்நிலையில், அவளது காதலையும் தன்னுடைய தவறுகளையும் புரிந்துகொண்டு, மனம் திருந்தி வாழ நினைக்கும்போது, வேலுவுக்கு வாழ்க்கையில் பல திருப்பங்கள்.

ரஜினி ரசிகனாக வரும் புதுமுக நாயகன் ரவி. கொத்தனாராகவே வாழ்ந்து அந்த கேரக்டரில் கனகச்சிதமாகப் பொருந்தி இருக்கிறார்.

''பத்தோடு பதினொண்ணுன்னு கையில் பணத்தைக் கொடுத்தவன் கூட, எப்படி சேர்ந்து வாழ முடியும்னு'' சித்தியைக் கட்டிப்பிடித்து அழும் நாயகி அஸ்வதாவின் நடிப்பு கண் கலங்க வைக்குது.

ஆரம்பத்தில் சிறுவர்களின் கதையின் நீளத்தையும் கொஞ்சம் குறைத்திருக்கலாம்.

புதுப்புது நடிகர்கள் மட்டும் இல்லாமல், புது டெக்னிஷியன்ஸ்களுக்கும் வாய்ப்பு கொடுத்து, புதுக்கிராமத்தில் கொத்தனார் சித்தாளுக்குண்டான காதல் கதையைச் சொன்ன இயக்குனர் சுந்தரனைப் பாராட்டலாம்.

கிராமத்துக் கதையை அதன் யதார்த்தம் மாறாமல் உயிரோட்டமாகக் காட்டிய ஒளிப்பதிவாளர் கருப்பையா சிறப்புக்குரியவர். செல்வ நம்பியின் இசையில் ''ஒத்த உசுருக்குள்ள..'' பாடல் சுகமான தாலாட்டு. உணர்வுபூர்வமான உயிரோட்டத்தைக் காட்சிபடுத்தி, கத்திரி போடாமலேயே கொடுத்த எடிட்டர் பி.ஜி.வேலுக்கு பாராட்டுகள்.

'திட்டக்குடி'- ஊருக்குள் பேர் சொல்லும் பிள்ளை.

\- ஆ.முத்துராமலிங்கம்

"பூவே... பூ...பூவே..."

அதிகாலையில் சைக்கிள் மணி சத்தத்தோடு, அந்தக் குரல் கேட்டதும், திண்ணையில் முழுக்கப் போர்த்திக் கொண்டு படுத்திருந்த கதிர்வேல், விருட்டென்று எழுந்து கொண்டான்.

மனத்தில் கறுகறுவெனக் கோபம் வளர்ந்தது.

யார் வீட்டுத் தோட்டத்திலும் பூவே பூக்காமல் போக வேண்டும். அப்பத்தான் இந்த நோம்புராஜன் கொட்டம் அடங்கும், என்று கறுவிக் கொண்டான்.

அவனைப் பார்த்துவிடக் கூடாது என்பதற்காக, திண்ணையைக் காலி பண்ணிக் கொண்டு வீட்டுக்குள் விரைந்தான்.

அவன் தங்கை... புறக்கடையிலிருந்த கனகாம்பரம் செடிகளில் இருந்து பறித்த பூக்களை மூங்கில் கூடையில் வைத்து எடுத்துக் கொண்டு வாசலுக்கு விரைவதைத் தடுக்க முடியாமல் முறைத்துப் பார்த்தான்.

"இந்தப் பூவை வித்துத்தான் சோறு தின்னப் போறமா போ உள்ள..." என்று ஒருமுறை சத்தம் போட்டதுக்கு குடும்பமே அவன் மீது பாய்ந்தது.

"அன்றாடம் ரெண்டு ரூபாய் கிடைக்குது. நேரங்காலம் தெரியாம திண்ணைல தூங்கினால் வந்துருமா.. உன்ன மாதிரி புள்ளதான நோம்புராஜன்.



அவன் எவ்வளவு அக்கறையா இருக்கான்...'' என்று.

கதிர்வேலுவும், நோம்புராஜனும் நண்பர்களாத்தான் இருந்தார்கள். இருவருக்கும் சம வயது.

சொல்லப் போனால் நோம்புராஜனை விடக் கதிர்வேலுவுக்கு படிப்பும் சரி, வசதியும் சரி... கொஞ்சம் அதிகம்.

நோம்புராஜன் எட்டாவது வரை படித்திருந்தான்.

கதிர்வேலு ஒன்பதாம் வகுப்பு.

நோம்புராஜன் வீட்டில் ஒரு பசு, ஒரு ஆடு, ஒரு கோழி.

கதிர்வேலு வீட்டில் எல்லாம் இரண்டிரண்டு.

''உனக்கென்னப்பா... வசதியான வீட்டுப் பிள்ளை...'' என்று வாய் பிளப்பான் நோம்புராஜன்.

கதிர்வேலுக்கு அடக்கமாய் இருந்து கொண்டு, அவன் சொல்லுக்கெல்லாம் தலையாட்டிக் கொண்டு அவனோடு நேற்று வரை ஊர் சுற்றிக் கொண்டிருந்த நோம்புராஜன், ஒரே இரவில் பிரபலமாகி விட்டான்.

யார் அந்தத் தொழிலைக் கற்றுக் கொடுத்தார்களோ தெரியாது.

தராசு, மூங்கில் கூடை, பிளாஸ்டிக் பை, பாக்கெட்டில் கொஞ்சம் சில்லறையுடன் சைக்கிளில் வந்தான்.

பூ வியாபாரமாம்.

தோட்டங்களுக்குப் போய் பூ வாங்கப் பெரிய முதலீடு வேண்டும்.

ஊரில்... வீட்டுக்கு வீடு புறக்கடை. சாக்கடை ஓரம் நாலு பூச்செடி. கனகாம்பரம் அல்லது டிசம்பர் பூ. கொஞ்சம் கொஞ்சம் பூத்திருக்கும்.

வழக்கமாய் வீட்டுப் பெண்கள் பூக்களைப் பறித்துத் தொடுத்துச் சூடிக் கொள்வார்கள். மீதியானால் யாருக்காவது தருவார்கள்.

நோம்புராஜன் அந்தப் பூக்களுக்கு விலை வைத்தான்.

அம்பது கிராம் இவ்வளவு.

நூறு கிராம் இருந்தால் இவ்வளவு.

கனகாம்பரத்துக்கு ஒரு விலை.

டிசம்பர் பூவுக்கு ஒரு விலை.

மல்லிப்பூ இருந்தால் அதற்குத் தனி விலை.

வீட்டு வீட்டுக்கு இப்படி உதிரிப் பூக்களைச் சேகரித்து, பாலிதீன் பையில் அடைத்து எட்டு மணி பஸ்ஸில் டிரைவரிடம் கொடுத்துவிட்டால், எட்டரைக்கு டவுன் வியாபாரியிடம் போய் சேர்ந்துவிடும்.

வாரம் ஒருமுறை பணம் வரும். வீடுகளுக்குப் போக, மீதிப் பணம் அவனுக்கு.

அதிகம் ஒன்றும் தேறிவிடாது.

முப்பது நாற்பது கிடைப்பது பெரிய விஷயம்.

அது அல்ல பிரச்னை.

அதிகாலையில் பூ வாங்கப் புறப்படுகிற நோம்புராஜன், சினிமா ஹீரோ மாதிரி ஒரு செட்டப்போடு வருவான். தலைமுடியை ஸ்டைலாக வாரியிருப்பான். கமகமவென்று பவுடர் அப்பிக் கொள்வான். கைக்குட்டையைக் கழுத்தில் கட்டியிருப்பான். அரைக்கைச் சட்டையை புஜபலம் தெரிவது போல அதை மேலும்

கருட்டிவிட்டுக் கொண்டிருப்பான். இதில் ஃபேண்ட்டு வேற...

ரஜினி மாதிரி சைக்கிளை வளைத்து நெளித்து ஸ்டைலாக ஓட்டி வருவான்.

''ஏண்டா வியாபாரம் செய்யறியா... சினிமாவில் நடிக்கறியா. மைனர் மாதிரி ஷோக் பண்றே...''

''காலைல ஃப்ரெஷ்ஷா போனாதாண்டா வியாபாரம் கறுகறுப்பா இருக்கும். தூங்கி வழிஞ்சுக்கிட்டு போனால், சரியாயிருக்காது...'' என்பான்.

அவன் தெருமுனையில் குரல் கொடுத்தாலே வீடுகளில் இருந்து பெண்கள் வாசலுக்கு வந்து விடுகிறார்கள்.



அதிலும் இளம்பெண்கள்.

காலையில் எழுந்து வாசல் தெளித்து, கோலம் போடச் சொன்னால், முறுக்கிக் கொண்டு படுத்திருப்பார்கள்.

இப்போதெல்லாம் 'பாவை நோம்பு' வைக்கிறவர்கள் போல விழித்துக் கொள்கிறார்கள்.

முன் இரவே செடிகளில் மொட்டுகளாகப் பறித்து மூடிவைத்து விடுகிறார்கள்.

வாசலில் நின்று தாவணியைத் திருத்துகிறார்கள்.

கழுந்து நகையைச் சரிசெய்கிறார்கள். முகத்தைத் துடைத்துக் கொள்கிறார்கள். தலைமுடியை ஒதுக்குகிறார்கள்.

அவன் அருகில் வந்தால் பரபரக்கிறார்கள். பேச்சு கொடுக்கிறார்கள்.

கெக்கபிக்கே என்று சிரிப்பு வேறு.

கேட்டால் பூ கணக்கு பேசுகிறார்களாம்.

பற்றிக்கொண்டு வரும் கதிர்வேலுவுக்கு.

**க**திர்வேலுவிடமும் சைக்கிள் இருந்தது. அவன் வீட்டிலும் பூ பூத்தது. சுமாரான தராசு ஒன்று ரெடி பண்ணிக் கொண்டான்.

போட்டி வியாபாரத்தைத் துவங்கினான்.

> **''உங்க கடையில புதுசா பையனைச் சேர்த்திருக்கீங்களே, எப்படி டிரெயினிங் கொடுப்பீங்க?''**
>
> **''முதல்ல உங்களை மாதிரி கஸ்டமருக்கு முடிவெட்டச் சொல்லுவேன்!''**
>
> **- வெ.சீதாராமன்**

முதலில் அவன் வீட்டிலேயே பூ தர மறுத்தார்கள்.

ரோஷத்தோடு புறப்பட்டான்.

''பூ... பூவே... பூவே...''

வீடுகளிலிருந்து எட்டிப் பார்த்த பெண்கள்,

''அட நீயா... நோம்புன்னுள்ள நினைச்சம்.. ஹும்'' என்று உள்ளே போனார்கள்.

''அவன்தான் காசு கொடுப்பானா... நான் தர மாட்டனா.. அவன் வாரத்துக்கு ஒருமுறைதான் வருவான். நான் அன்னன்னைக்கே கொடுத்துடறேன். முன் பணமா வேணும்னாலும் வாங்கிக்கங்க...'' என்றான்.

''வியாபாரம் பண்ற ஆளைப் பாரு...'' என்று விரட்டினார்கள்.

விட்டால் ஊரில் நோம்புராஜனுக்கு ரசிகர் மன்றமே வைத்துவிடுவார்கள் போல..

சிறிது நாளில், பூச்செடி இல்லாத வீடு களில்கூடப் புதிதாகப் பூச்செடிகள் வைத்து வளர்க்க ஆரம்பித்தார்கள். ஏற்கெனவே செடிகளிலிருந்த வீடுகளில் மேலும் செடி கள் நட்டனர். நோம்புராஜன் எங்கிருந்தோ செடிகள் வாங்கி வந்து கொடுத்தான். சில வீடுகளில் அவனே பள்ளம் பறித்து செடி களை நட்டுக் கொடுத்தான். இலவசமாக உரம் கொடுத்தான்.

சமூக சேவகனாகவும் அவன் மாறிக் கொண்டு வருவதைக் கதிர் வேலுக்குத் தாங்கமுடியவில்லை.

''நிறுத்திக்க. இப்படியெல்லாம் பண்ணி ஆளமயக்கற வேலை பண்ணாதே. ஒரு ஃப்ரண்டுன்ற முறையில எச்சரிக்கறேன். நாளைக்கு ஏதாவது வம்புதும்புல நீ சிக்கிக்கிட்டா மாட்டினே... உனக்கு மட்டுமில்ல.. எனக்கும் கெட்ட பேர்..'' என்றான்.

''ஒன்னுமில்லாத விஷயத் துக்கு ஏண்டா அலட்டிக்கற. நான் எப்பேர்ப்பட்ட ஆள்னு உன் தங்கச்சிய கேள்டா...'' என்று கடுப் பேற்றி விட்டான் அவன்.

ஒவ்வொரு நாள் காலையும், கதிர் வேலுக்கு எரிச்சலோடு விடிந்தது. அவன் குரலைக் கேட்டாலே பற்றிக்கொண்டு வந் தது. ஒன்று, அவன் காலை உடைத்துக் குரல்வளையை நெரித்துவிட வேண்டும். அல்லது ஊரில் உள்ள பூச்செடிகளை எல்லாம் வெட்டியெறிய வேண்டுமென்று ஆத்திரப்பட்டான்.

இரண்டு காரியமும் தன்னால் ஆகக் கூடியதல்ல என்று உணர்ந்து, மனதுக்குள் பொருமிக் கொண்டிருந்த கதிர்வேலுக்கு இயற்கை கைகொடுத்தது.

பூக்கும் பருவம் முடிவுக்கு வந்தது. பூக்களின் அளவு குறைந்து கொண்டே வந்து ஒரு கட்டத்தில் நின்றுவிட்டது.

'இப்ப என்ன பண்ணுவே...

இப்ப என்ன பண்ணுவே...' என்று நோம்புராஜன் முன் ஆடி, பழிப்பு காட்டி விட்டு வந்த கதிர்வேல், அன்றிரவு நன்றா கத் தூங்கினான். அதிகாலை அவஸ்தை இருக்காது என்ற நினைப்புடன்.

ஆனால் அந்த அதிகாலையும் அவ னைத் திடுக்கிட வைத்தது.



**எங்கோ ஒரு இடத்தில் நடக்கும் தப்பு வேறொரு இடத்திலிருக்கும் சம்பந்தில்லா ஒரு மிடில் கிளாஸ் இளைஞனை எப்படிப் பாதிக்கிறது என் பதுதான் 'நான் மகான் அல்ல' கதையின் உயிராம். தமன்னாவை விட காஜல் அழகு என்கிற கார்த்தியின் தாட்ஸ்தான் கோலிவுட்டில் இப்போ லேட்டஸ்ட் கிசுகிசு!**

**- மணிகண்டன்**

''பூவே... ரோஸ், ரோஸ்.. ரெட்ரோஸ், மல்லி, முல்லை, சாமந்திப் பூவே...'' என்ற குரலைக் கேட்டு வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்து பார்த்தான்.

அதே நோம்புராஜன்.

அதே கெட்-அப்பு..

முன்பு ஊரிலிருந்து பூக்கள் வாங்கி டவுனுக்கு அனுப்பியவன், இப்போது டவுனிலிருந்து புதுப்புது வகைப் பூக்களை வரவழைத்து விற்கத் துவங்கியிருந்தான்.

ரோஜாவுக்கும், மல்லிக்கும் பெண்களி டம் நல்ல வரவேற்பு! கதிர்வேலுக்கு காது களில் ஆவி பறந்தது.

''பூவே... பூபூவே...'' ✿

"எங்க ஊர்பக்கம் வயலில் நாற்று நட்டுக் கொண்டிருந்த ஒரு பெண்மணி கழுத்தில் ஆடிக்கொண்டிருந்தது - கயிற்றில் கட்டியபடி இருந்த செல்போன். 'ஏனம்மா தாலியைக் காணோம்' என்று பதறிப்போய்க் கேட்டேன்.அவள் சாந்தமாகச் சொன்னாள், 'தாலியை விற்றுத்தான் இதை வாங்கினேன்,'. எது எப்படி மாறினாலும் அவளின் நாற்று நடும் மானுட வேலை மாறாமல் இருந்தது. அப்படித்தான் இளைய சமூகமே, நீங்கள் கற்பதற்குத் தேர்ந்தெடுக்கும் துறைகள் வெவ்வேறானதாக இருப்பினும், எண்ணற்ற மாற்றங்கள் நிகழ்ந்தாலும் இறுதி இலட்சியம் மனித நேயத் தேவைகளுக்கு உதவுவதாக அமைய வேண்டும். கொடையில் உன்னதமானது கல்விக் கொடைதான்! உங்கள் வாழ்நாளில் நீங்கள் உன்னதங்களைச் சாகுபடி செய்யவே, இந்த விழாவில் விதை நெல்லாய் உதவித் தொகை வழங்கப்படுகிறது'' என்று பேசத் துவங்கினார் வைரமுத்து.

இந்த விழாவுக்குக் கவியரசர் வைரமுத்து. நீதியரசர் ரகுபதி, சிவனாண்டி ஐ.பி.எஸ். என்ற மூன்று தேனீக்களும் (தேனி மாவட்டக்காரர்கள்) இந்த முகைக்கு (மலருக்கு), அதாவது சிறுமுகைக்கு வந்திருந்தார்கள். கோவை மாவட்டத்திலிருக்கும் ஸ்ரீ விஜயலட்சுமி பொதுநல அறக்கட்டளை தமிழகம் முழுவதும் உள்ள கல்வியில் சிறந்த ஏழை மாணவர்களுக்கு கல்வி ஊக்கத் தொகை அளிக்கும் விழாவை சமீபத்தில் நடத்தியது.

''தமது இளம் வயதில் எலக்ட்ரீஷியனாக வாழ்வைத் துவங்கி இன்று பல ஆயிரம் மாணவர்களின் வாழ்வில் கல்வி வெளிச்சம் காண நிதியளிக்கும் அறக்கட்டளை


* ஒ.ஆறுமுகசாமி


* வைரமுத்து

நிறுவனர் ஒ.ஆறுமுகசாமி போன்ற வள்ளல் எங்கள் காலத்தில் இருந்திருந்தால், இன்னும் கூட உயர் பதவியைக் கைப்பற்றியிருப்போம்,'' என்று விஞ்ஞானி சந்திரயான் அண்ணாதுரை இந்த அறக்கட்டளைப் பணியை வியந்தார்.

ஸ்ரீ விஜயலட்சுமி அறக்கட்டளையின் பொதுநல நிறுவனர்

ஓ-ஆறுமுகசாமி பேசுகையில்...

"அரசு மற்றும் அரசு உதவித் தொகை பெறும் பள்ளியில் நீங்கள் படித்து நல்ல மதிப்பெண்களைப் பெற்று இருக்கிறீர்களா? படிப்பைத் தொடர முடியவில்லையா? உண்மையிலே நீங்கள் வறுமையில் படிப்பைத் தொடர முடியாதவரா? ஆதாரங்களுடன் எங்களுக்கு விண்ணப்பிக்கலாம். மறைந்த என் மனைவியின் பெயரால் துவங்கப்பட்ட அறக்கட்டளை மூலம், வாரி வழங்க இறைவன் எனக்கு செல்வத்தையும், அதைச் செயல்படுத்த மூன்று பிள்ளைகளையும் எனக்கு உறுதுணையாக அளித்துள்ளான். அடுத்த ஆண்டு நிதி உதவியை இன்னும் கூட்டுவேன்" என்றார்.



* பூங்கொடி

இந்த ஆண்டு சுமார் மூவாயிரம் மாணவர்கள் (10ம் வகுப்பு முடித்தவர்களுக்கு 5,000மும், +2 முடித்து மேற்படிப்பு படிப்பவர்களுக்கு 25,000 ரூபாயும்) பயன்பெற்றுள்ளனர். இதுமட்டுமின்றி, அறுவை சிகிச்சைக்கான நிதிஉதவிகளையும் அளிக்கிறது இந்த அறக்கட்டளை. அர்த்தமற்ற இலவசங்களால் நாம் வீணாகாமல், நம் வாழ்வில் நாம் சாகுபடி செய்ய விதைநெல் அளிக்கும் வள்ளல்கள் வெவ்வேறு பெயரில் இன்றும் இருக்கத்தான் செய்கிறார்கள் என்கிறார் கோவையைச் சார்ந்த பூங்கொடி.

- ஆர்.பாலா

# விதைநெல் தந்த திருவிழா !



'மலர் மேல் நிலைப்பள்ளி' - என்ன இது என்கிறீர்களா? தேவர் குட் ஃபிலிம் நிறுவனத்துக்காக இயக்குநர் ஸ்ரீகுமார் இயக்கும் படம். ஏற்கெனவே சரத்குமார் நடித்த சத்ரபதி படத்தை இயக்கியவர்.

(இயக்குநர் சார்! மலர்ங்கறது யாரு?)



● படித்துறை படத்தில் நவீன இலக்கிய எழுத்தாளர்கள் எஸ்.ராம கிருஷ்ணனும், நாஞ்சில் நாடனும் தலா ஒரு பாடலை எழுதியிருக்கிறார்களாம். எஸ்.ராமகிருஷ்ணன் எழுதிய பாடல் படத்தின் ஓப்பனிங் காம்.

(எஸ்.ராமகிருஷ்ணனுக்கு அப்போ ஒப்ப னிங்கே நல்லா இருக்குன்னு சொல்லுங்க!)

● கமலின் மன்மத அம்புக்கு ஒளிப்பதிவு செய் யும் மனுஷ்நந்தன் எழுத்தாளர் ஞாநியின் மகன்.

(ஞாநி சார்! மகனுக்கு பூச்செண்டா... குட்டா...?)

சன் டி.வி.யில் செய்தி வாசிக்கும் 'மணிகை' எட்பாய்ண்ட் என்டர்டெயின்மெண்ட்டுக்காக இயக்கும் படம் 'வாடா போடா நண்பர்கள்'. படத்தைத் தயாரிப்பது சிங்கப்பூர் தமிழர் அருமைச் சந்திரனாம்.

(படத்தை நண்பர்களாவது 'அடப் போடா'ன்னு சொல்லாம இருக்கணும்.)

# விஜய்க்கு பிரபாகரன் வேடம்?



'திருமங்கலம் பேருந்து நிலையம்' - படத்தை இயக்குகிறார் முத்து (எ) ஆஷிஷ் மெஹ்ரா. புதிய பயணம் படத்தில் நடித்தவர் இந்த முத்து. அதுக்கு என்ன என்கிறீர்களா? கதை, திரைக்கதை, வசனம், ஒளிப்பதிவு, எடிட்டிங் எல்லாமே இவர்தானாம்.

(அப்போ படத்தையாவது ரசிகர்களைப் பார்க்க விடுவாரா?)

இனி திரைப்படத்துக்குப் பாடல்கள் எழுத மாட்டேன் என்று சபதம் செய்திருந்த கவிஞர் அறிவுமதி, தன் சபதத்திலிருந்து பின்வாங்கி, பாடல் எழுத ஆரம்பித்து விட்டார். கூடவே, சீமான் இயக்க விஜய் நடிக்க இருக்கும் படத்துக்கு வசனமும் இதே அறிவுமதிதானாம்.

(அப்போ விஜய்க்கு பிரபாகரன் வேடமோ?)



கலைமாமணி டாக்டர். ஜெயசித்ரா, (200 படங்களுக்கு மேல் நடித்து சாதனை புரிந்த அதே ஜெயசித்ராதான்) ஒரு படத்துக்கு கதை, திரைக்கதை, எழுதி தயாரிக்கிறார். படத்தின் பெயர் 'நானே எனக்குள் இல்லை'.

(கதையாவது இருக்குமா?)

- மகிமைராஜன்

## 5 மண்டபம்



# வெருண்டு ஓடிய பரமன்!

ஆலயங்களின் அடுத்த அங்கம், மண்டபம். சின்னஞ்சிறிய ஆலயமாக இருந்தாலும், முகமண்டபம் கட்டாயம் இருக்கும். மற்றபடி, மஹாமண்டபம், அர்த்தமண்டபம், கருவறை என்பது பொதுவான அமைப்பு என்றாலும், பெரிய ஆலயங்கள் இதற்கு விதிவிலக்கு.

'நகரேஷு காஞ்சி' என்று புகழ்பெற்ற, காஞ்சி வரதராஜப் பெருமாள் திருக்கோயிலில், வசந்த மண்டபம், வாகன மண்டபம், அபிஷேக மண்டபம் என்று பல மண்டபங்கள் உண்டு. இங்குள்ள கூர்ம மண்டபம் என்னும் நூற்றுக்கால் மண்டபத்தில்தான் வரதராஜப் பெருமாளின் திருக்கல்யாணம், விடாயாற்றி... உள்ளிட்ட வைபவங்கள் நடைபெறும்.

நாவுக்கரசருக்கும், ஞானசம்பந்த பெருமானுக்கும் ஈசன் படிக்காசளித்த தலம் திருவீழிமிழலை. இங்குள்ள வௌவால் நத்தி மண்டபம் விசேஷமானது. நடுப்புறம் தாங்குவதற்குத் தூண்களில்லாமல், உட்பக்கம் கூடுபோல் வளைந்து, மேலே இணைக்கப்பட்டுள்ள இந்த மண்டபம் அசாதாரணம். அதனால்தான், ஆலயம் எழுப்ப ஒப்பந்தம் போடும்போது, 'திருவலஞ்சுழி பலகணி, திருவீழிமிழலை வௌவால் நத்தி மண்டபம், ஆவுடையார் கோயில் கொடுங்கை இவை நீங்கலாக, மற்ற கலை அம்சங்களைச் செய்து தருகிறோம்' என்று விதிவிலக்கு எழுதி, ஸ்தபதிகள் கையெழுத்திடுவார்களாம். இவை அனைத்தும் நுணுக்கமான வேலைப்பாடுகள்.

சிவ ராஜதானியாகத் திகழும் திருவாரூர் தியாகராஜ ஸ்வாமி திருக்கோயிலில் உள்ள ஆயிரங்கால் மண்டபம் என்னும் தேவாசிரிய மண்டபம் தனிச் சிறப்புடையது. சுந்தரர் வாழ்விலும் சரி; தமிழ் இலக்கியத்திலும் சரி; புதிய வரவுக்கு வழிவிட்டது இந்த மண்டபம்தான்! அது, சுவையான சம்பவம்.

ஆரூர்ப் பெருமானைத் தரிசிக்க வந்தார் சுந்தரர். ஆலயத்தினுள்ளே செல்லும்போது, இந்த ஆயிரங்கால் மண்டபத்தில் இருந்த அடியார்களைக் கவனிக்கவில்லை; வணங்கவுமில்லை. அதைக் கவனித்தார் விறன்மிண்டர்;



**ஸ்ரீநிவாச ராகவன்**

அறுபத்துமூன்று நாயன்மார்களில் இவரும் ஒருவர். 'அடியார்களை வணங்கத் தவறிய நீ, ஆண்டவனைத் தரிசிக்கக் கூடாது' என்று தடுத்து விட்டார். நொந்துபோன சுந்தரர், ஆரூரானையே சரணடைந்தார். அவருக்கு, விமானத்திலேயே தரிசனம் தந்தார் தியாகேசப் பெருமான். 'ஓட்டுத் தியாகர்' என்று, விமானத்தில் இந்த மூர்த்தியை இன்றும் காணலாம்.

பிரச்னை இதோடு தீரவில்லை. தான் தடுத்தும், சிவபிரான் சுந்தரருக்குத் தரிசனம் அளித்த செய்தியை அறிந்தார் விறன்மிண்டர். 'இனி, இந்த சுந்தரனையும் பார்ப்பதில்லை. நாம் தடுத்த பிறகும் சுந்தரனுக்குத் தரிசனம் அளித்த இந்தத் தியாகேசனையும் பார்ப்பதில்லை' என்று சொல்லி, திருவாரூரை விட்டே வெளியேறிவிட்டார். அப்படி வெளியேறிய விறன்மிண்டர், தங்கியிருந்த இடத்தின் இன்றைய பெயர் 'ஆண்டிப்பந்தல்'.

இங்கு சிவனடியார்க்கு உணவிடும் திருப்பணியைத் தொடர்ந்து செய்து வந்தார் விறன்மிண்டர். ஆனால், திருவாரூர்க்

காரர் என்றால், அன்னமிட மாட்டார். தவிர, கோடரியை வீசி, வந்தவரின் காலையும் தரித்து விடுவார். அவ்வளவு கோபம், திருவாரூரின் மீதும், தியாகேசப் பெருமானின் மீதும்.

தன்னைச் சினந்தாலும் பொறுக்கும் குணமுடைய பரமன், தன் அடியார்கள் பாதிப்படையும் போது பதறிப்போனான். 'தன் மீது மாறாத அன்பும், பக்தியும் கொண்ட விறண்மிண்டர், கோபத்தால் செய்யும் தவறும் தன்னைச் சார்ந்ததே; அவரை வழிப்படுத்துவதும், ஆட்கொள்வதும் தம்முடைய கடமை' என்று நினைத்தான். எனவே, தானே அடியாராகி விறண்மிண்டர் வீட்டுக்கு உணவருந்தப் போனான். பரமனைப் பார்த்த விறண்மிண்டரின் மனைவி கேட்டார் : 'ஐயா, நீங்கள் எந்த ஊர்?' பரமன் சொன்னான்: 'அம்மா, வளம் நிரம்பிய திருவாரூர்வாசி'.

அதைக் கேட்ட அந்த அம்மையார் கலங்கினார். 'ஐயா, உங்கள் ஊரைக் கேட்டால், என் கணவர் தங்கள் காலைத் தரித்து விடுவாரே' என்றார். அப்போது பரமன் சொன்னான்: 'அம்மா, உங்கள் கணவர் தமது வலப்பக்கம்தானே கோடரியை வைத்திருப்பார். இன்று மட்டும், அதை இடப்பக்கம் இருக்குமாறு வைத்துவிடுங்கள்.'

அதன்படியே செய்தார் அந்த அம்மையார். வந்த அடியாரை வரவேற்று அமர்த்திய விறண்மிண்டர், எந்த ஊரென்று கேட்க பரமனும் உண்மையைச் சொன்னான். கோபம் பொங்க கோடரியைத் தேடினார். இடம் மாறி இருந்ததால், ஒருகணம் தடுமாறினார். அதே கணத்தில், விரைந்து ஓடினான் பரமன். துரத்தினார் விறண்மிண்டர்.

திருவாரூர் எல்லையை அடைந்ததும் பரமன் உரத்துச் சொன்னான்: 'திருவாரூர் எல்லைக்குள் வந்தோமிப்பால்'. துரத்தி வந்த வேகத்தில், திருவாரூர் எல்லைக்குள் நுழைந்ததை எண்ணித் தம் கால்களைத் துண்டித்துக் கொள்ள முனைந்தார் விறண்மிண்டர். அவரைத் தடுத்து ஆட்கொண்டான் தியாகேசன். அவரும் சினம் நீங்கி, தியாகேசனிடம் அன்பு பூண்டார். அப்படி தியாகேசனை விரட்டி வந்த விறண்மிண்டர் பிரவேசித்த பகுதியே, இன்று 'வண்டாம்பாலை' என்று வழங்குகிறது. வந்தோமிப்பால் என்பதன் மரூஉ.

தன் பொருட்டு, தியாகராஜப் பெருமான் செய்த இந்த விளையாடல் சுந்தரரை உருக்கியது. தன்னுடைய பிழையை உணர்ந்தார். விறண்மிண்டரிடம் பிழை பொறுக்க வேண்டினார். இருவருக்குள்ளும் நட்பு பிறந்தது. அதன் பிறகுதான், 'தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்' என்று தொடங்கி, அடியார்களைக் குறித்து 'திருத்தொண்டத் தொகை' பாடினார் சுந்தரர். அதன் அடிப்படையில்தான், நம்பியாண்டார் நம்பி 'திருத்தொண்டர் திருவந்தாதி' பாடினார். இவைதான் பிற்காலத்தில் சேக்கிழார் பெருமான் பெரிய புராணம் பாட அடித்தளமாக அமைந்தன. இத்தனைக்கும்



காரணமாக இருந்தது. தேவாசிரிய மண்டபம் எனப்படும் தேவாஸ்ரய மண்டபம். அதாவது, 'தேவர்களும் விரும்பும் மண்டபம்.' அந்தத் திருத்தொண்டர் புராணம் அரங்கேறியது தில்லைச் சிதம்பரத்தில் உள்ள ஆயிரங்கால் மண்டபத்தில்.

ஒப்பற்ற கற்பனையாலும், அணி நயங்களாலும், உவமைகளாலும், சந்தங்களாலும் தன்னிகரற்ற படைப்பாக ராம காதையைச் சிருஷ்டித்த கவிச்சக்கரவர்த்தி கம்பன், அதை அரங்கேற்றியது திருவரங்கம் அரங்கநாதர் ஆலயத்தில் உள்ள மண்டபத்தில்தான். கச்சியப்ப சிவாச்சாரியாரின் 'கந்த புராணம்' காஞ்சி, குமரக் கோட்டத்தில் உள்ள மண்டபத்தில்தான் அரங்கேற்றமானது.

பக்தர்களுக்கு நிழல் தருவது மட்டுமல்ல; பக்தி இலக்கியங்களின் பிறப்பிடமாகவும் அமைந்தவை மண்டபங்கள். கலை வளர்ச்சிக்கும், ஆலய மண்டபங்களே பயன்படுத்தப்பட்டன. இசைமுழக்கமும், இசைத் தமிழான தேவார, பிரபந்தங்களை சந்தத்தோடு சொல்வதும் ஆலய மண்டபங்களில்தான்.

புகழ்பெற்ற தஞ்சைப் பெரிய கோயிலில், 'ராஜராஜேஸ்வர நாடகம்' என்னும் நாட்டிய நாடகம் நடைபெற்றதாகக் கல்வெட்டுச் செய்தி. திருவரங்கம் அரங்கநாதப் பெருமாள் ஆலயத்தில் உள்ள திருமாமணி மண்டபத்தில், வைகுண்ட ஏகாதசியையொட்டி நடைபெறும் பகல் பத்து, ராப்பத்து உற்சவங்களும், அரையர் சேவையும் தனிச் சிறப்புடையவை. சிதம்பரத்தில் நடைபெறும் நாட்டியாஞ்சலியும், கோலாபுரம் என்னும் கொல்லூரில் நடக்கும் கலை அரங்கேற்றங்களும் 'ஆண்டவனுக்குத் தொடர்பில்லாத எதுவும் கலையே அல்ல' என்று உரத்துச் சொல்கின்றன.

மண்டபங்களில் குறிப்பிடத்தக்கது, மதுரை மீனாட்சியம்மன் கோயிலில் இருக்கும் ஆயிரங்கால் மண்டபம். இதை வடிவமைத்தவர் தளவாய் அரியநாதர். சென்னையை அடுத்துள்ள மப்பேடு என்னும் மெய்ப்பேட்டில், மிக ஏழ்மையான குடும்பத்தில் பிறந்தவர் இவர். விசுவநாத நாயக்கரின் அமைச்சர் மற்றும் படைத்தலைவர் என்ற இருபதவிகளையும் ஒருங்காக்கிய 'தளவாய்' என்ற பொறுப்பை வகித்தவர். இளம் வயதில், இவரது எதிர்காலத்தை கணித்து வழிகாட்டினார் ஓர் அந்தணர். பிற்காலத்தில் தளவாயான அரியநாதர் தாம் வாக்களித்தபடியே அந்த அந்தணரின் மைந்தருக்கு உதவினார் என்கிறது வரலாறு.

மதுரை மீனாட்சியம்மன் ஆலயத்தில் உள்ள ஆயிரங்கால் மண்டபத்தில், இன்றும் சிலாரூபமாக நிற்கிறார் அரியநாதர். 'மாமனிதர்கள் எல்லாம் கடந்த காலங்களை மட்டுமல்ல; கொடுத்த வாக்குறுதிகளையும் மறப்பதில்லை. அதுதான் அவர்களின் வெற்றிக்கும், புகழுக்கும் அடித்தளம்' என்பதைத்தான் அந்த ஆயிரங்கால் மண்டபம் நினைவூட்டிக் கொண்டிருக்கிறது.

(அடுத்த வாரம் - விமானம்)



பூக்களிடம் விளையாடும் சிறுவர்கள், சாந்தமாய்ப் புல் தரையில் அமர்ந்து காத்திருக்கும் யுவதிகள், ஆங்காங்கே இருக்கும் தத்துவ மொழிகளைப் படித்தபடி நிற்கும் இளைஞர்கள், பளிங்கு மேடையில் அமர்ந்து, அடுத்தகட்டப் பணி பற்றி அலசும் பெரியவர்கள் - ரம்மியமான அந்தச் சூழலை 'ஜனனத்தைப் போல் ஒரு புதியதுமில்லை; மரணத்தைப் போன்ற பழையதுமில்லை' என்ற வைரமுத்து வரிகள் ஒலித்தபடி வருடிச் செல்கிறது. வந்தவர்கள் அனைவரும் இருக்குமிடம் - நவீன மயமாக்கப்பட்ட ஒரு மின் தகன சுடுகாட்டில்தான். நகராட்சியோடு ரோட்டரி



* கருணாநிதி



* மாதவரம் மின் மயானம்

மனிதம் பவுண்டேஷனை நடத்தி வரும் என்.கருணாநிதி வடசென்னையிலுள்ள சுடுகாடுகளை நவீனமுறைக்கு மாற்றிப் பராமரித்து வர அரசுக்கு விண்ணப் பித்திருக்கிறார். அவரிடம் கேட்டபோது...

"வசதியில்லையா நாலாயிரம் கொடு, வெயிட் பார்ட்டியா ஏழாயிரம் கொடு. இதுதான் எல்லா சுடுகாட்டிலேயும் சடலத்தை எரிக்கையில் நடக்கும் பேரம். இத்தனைக்கும் இடுகாட்டுப் பணியாளர்கள்... அரசு ஊழியர்கள். சோகத்தைச் சுமந்துக்கிட்டிருக்கிற யாரும் வாக்கு வாதமோ கம்ப்ளெயின்டோ பண்ண முடியாது. இடுகாட்டுல சடலத்தை வெச்சுக்கிட்டுச் செய்யற இந்த ஆர்கியூமெண்ட், செத்தவங்களை அவமானப்படுத்துறா மாதிரியும் இருக்கும். இந்தத் தொல்லைக்குத் தான் சுடுகாட்டைப் பராமரிக்கும் பணியை தனியாரிடம் (அ) தொண்டு நிறுவனத்திடம் விடச் சொல்றோம். வட சென்னை மாதவரம் நவீன சுடுகாட்டுக்குச் சென்றால் 800 ரூபாயில் எல்லா வேலையும் முடிஞ்சிடுது. வெளியே மண்டையோடு எலும்புத் துண்டுகளைப் பார்க்க முடியாது. பங்களா மாதிரி சுத்தமா, அழகாக இருக்கும். இந்த நவீனமய சுடுகாட்டுக்குப் பெண்களும் பயமின்றி வந்து இறுதிச் சடங்கை நடத்த முடியுது. காலத்திற்கு ஏற்றாற்போல் நாம் மாறாவிட்டால், காலம் நம்மைப் புறக்கணித்து விடும். அதைவிடத் தொண்டு நிறுவனங்கள் சுடுகாட்டைத் தங்கள் பொறுப்பில் ஏற்றுக் கொண்டால், அந்த இடுகாட்டு ஊழியர்களை அரசு வேறு துறைக்கு பணியமர்த்தலாம். ஆக, பாதிப்பு ஏதுமில்லை. இது வளர்ச்சியை, தூய்மையை நோக்கிய பயணம்'' என்கிறார்.

# பிரைவேட் சுடுகாடு?

கிளப் மற்றும் ஆத்மா என்ற தன்னார்வத் தொண்டு நிறுவனம் சேர்ந்ததால், இந்த அற்புதம் திருப்பூரில் நடந்திருக்கிறது. மெல்ல மெல்லச் சுடுகாடுகள் கூடத் தனியார் மயமாகி வருகிறது என்ற குற்றச்சாட்டும் கூடவே எழுகிறது.

உத்திரப்பிரதேசத்திலுள்ள ஒரு நவீனமயமாக்கப்பட்ட (தன்னார்வத் தொண்டு நிறுவனம் நடத்தும்) சுடுகாட்டைத் தினம் எழுநூறு பேர் சுற்றுலாத்தலம் போலப் பார்வையிட்டும் செல்கின்றனர். தமிழகம் முழுதும் இந்த நவீன மின்தகனச் சுடுகாடு தனியார்வசம் பரவும் நிலையில்...

குறும்பட இயக்குனரும், எழுத்தாளருமான திருப்பூரைச் சேர்ந்த தாண்டவக்கோனிடம் கேட்டபோது...



* தாண்டவக்கோன்

* திருப்பூர் மின்மயானம்

"மின் மயான ஏற்பாட்டிற்கு முன், திருப்பூரின் நூற்றுக்கணக்கான கிராமங்களில் அதே எண்ணிக்கையில் மயானங்களும் இருந்திருக்குமே...? அம்மயான வேலைகளை வாழ்வாதாரமாக நம்பி ஒரு அடித்தட்டுச் சமூகமே பிழைத்திருக்குமே...? இப்போதிருக்கும் மின் மயானத்தில், வெறும் ஆறேழு பேருக்கு மட்டும்தானே வேலை வாய்ப்பு...? மற்றவர்களின் கதி...? இக்கேள்விகளையும் சேர்த்தே தகனம் செய்து பஸ்மமாக்கி விட்டது மின்மயானம். செயலிழந்து கிடக்கும் பழைய சுடுகாட்டு நிலங்கள், தற்போது ஆக்கிரமிப்பாளர்களின் கைகளுக்கு மாறும் அபாயத்தில் உள்ளன. சமூக விரோதிகளின் புகலிடங்களாக இருக்கும் பல கோடி மதிப்புள்ள அந்த நிலங்களை, அரசு உபயோகத்திற்குக் கொண்டுவர முறையான திட்டங்கள் உள்ளதா என்றும் தெரியவில்லை.

படைத்தல், காத்தல், அழித்தல் மூன்றையும் கடவுளரின் முத் தொழில்களாகச் சொல்கிறார்கள். அது அரசுகளுக்குப் பொருந்துமே...? படைத்தலுக்கு அரசு மகப்பேறு மருத்துவமனை, காத்தலுக்கு ரேஷன் கடை, அரசு பொது மருத்துவமனை என்றால் அழித்தலுக்கு அரசே மின்மயானத்தை உருவாக்கலாமே...? ஒரு மின் மயானம் நிர்வகிக்கக் கூட கையாலாகாததா அரசு இயந்திரம்...? அரசு, ஒவ்வொரு பொறுப்பாகத் தட்டிக் கழித்துக் கொண்டு தனியார் மயத்தை நாடும் அடிப்படை என்ன? அத்தனைக்கும் ஒரே பதில், ஊழல்தான்."

செய்தியும், படமும் : **அமிர்தா**

**கருத்து யுத்தம்**

**வாசகர்களே! இது சரியா? தவறா?**
**உங்க கருத்து என்ன? 'கருத்து யுத்தம்' என்று குறிப்பிட்டு எழுதுங்க...**
**kalki@kalkiweekly.com-க்கும் அனுப்பலாம்.**

# மை... பைக்!



**நா**ன் ஹீரோஹோண்டாவை 2004-ல் வாங்கி என் பெண்டாட்டி பேரை வண்டியில எழுதி ஓட்ட ஆரம்பிச்சேன். தினமும் மெய்ன்டெனன்ஸ். இப்பவும் புதுசு மாதிரி இருக்கும். எல்லோரும் ஆச்சரியப்படுவாங்க. ஒரு சின்ன சிராய்ப்புக் கூட வராம பார்த்துப்பேன். வீரனுக்கு குதிரை மாதிரி இது எனக்கு. ரோட்டுல வண்டி நிற்க வெச்சிருக்கிறப்போ, ஒருத்தன் யதேச்சையா எச்சிலத் துப்பி அது வண்டி மேல பட்டுடுச்சு. ஒரே சண்டை. அவனை டீக்கடையில தண்ணி வாங்கி என் வண்டியைக் கழுவ வெச்சி, அவன் கைக் குட்டையில தொடச்சிட்டுப் போக வெச்சேன். வண்டிங்கறது சும்மா யில்லீங்க. அது என் ரேஷன் கார்டுல இல்லாத லைஃப் மெம்பருங்க.

**- கே.ரமேஷ், நேருநகர்**

**நா**ங்க இரண்டு பேரும் ரொம்ப ரொம்ப குளோஸ் ஃபிரெண்ட்ஸ். எங்களுக்கு ஸ்கூட்டிதான் ஃபிரண்ட். நாங்க செல்லமா இதுக்கு பிங்க்கின்னு பேர் வெச்சிருக்கோம்.

எங்க ரெண்டு பேருக்கும் சண்டை வந்தா எங்களைச் சேர்த்து வைக் கிறதே பிங்க்கிதான். எப்படின்னு கேக்கறீங்களா? அதுகிட்ட மாத்தி மாத்தி ரிப்போர்ட் பண்ணுவோம். எங்களுக்கே தாங்க முடியாமல் சிரிப்பு வந்துடும். சிரிச்சுட்டு சேர்ந்துக்குவோம்.

எங்களுக்கு குஷி வந்தாலும், மூடு-அவுட் ஆனாலும், யாரையாவது, எதையாவது டபாய்க்க வேண்டியிருந்தாலும், பிங்க்கியின் மேல் உட்கார்ந்து ஸ்டார்ட் பண்ணிக் கிளம்பிடுவோம். எங்க மாதிரியே எங்க பிங்க்கியையும் நீட்டா அழகா வெச்சுக்கிறதுக்கு ரெண்டு பேரும் ரொம்பவுமே மெனக்கெடுவோம்.

**- ஹர்ஷினி, ஆர்த்தி, கோவை.**



வாசகர்களே!
உங்க பைக் அனுபவத்தை
'மை பைக்' என்று குறிப்பிட்டு
எழுதி அனுப்புங்க.
kalki@kalkiweekly.com க்கும்
அனுப்பலாம்.

# கல, கலக்குதா கழகக் கோட்டை?

"ஒரு ரூபாய் அரிசி, காப்பீடு திட்டம், 108 ஆம்புலன்ஸ், இலவசத் தொலைக்காட்சி என்று கலைஞர் அரசு ஏராளமான சாதனைகளைச் செய்திருந்தாலும், மக்களிடம் ஏதோ ஒரு அதிருப்தி நிலவுவதை உணர்கிறோம். போதாதற்கு தமிழகம் முழுக்கப் பல மாவட்டங்களில் கோஷ்டிப் பூசல் நிலவுவது வேறு கவலையைத் தருவதாக உள்ளது'' என்று ஒரு மூத்த கழக உடன்பிறப்பு தொடர்ந்தார்.

● வட, மற்றும் தென் சென்னையில் மாவட்டச் செயலாளர்களின் சர்வாதிகாரப் போக்கு.

● சேலத்தில் வீரபாண்டியாருக்கும், சட்டமன்ற உறுப்பினர் ராஜேந்திரனுக்கும் மோதல்; கோவையில் பொங்கலூர் பழனிச்சாமிக்கும், வீரகோபாலனுக்கும் உரசல்;

● திருச்சியில் அமைச்சர் நேருவுக்கும், அமைச்சர் செல்வராஜுக்கும் இடையே புகைச்சல்,

● விழுப்புரத்தில் பொன்முடிக்கும், ஏ.ஜி.சம்பத்துக்கும் லடாய்; ஈரோட்டில் என்.கே.பி.ராஜாவுக்கும், சுப்புலட்சுமி ஜகதீசனுக்கும் டிஷ்யூம்.

● ராமநாதபுரத்தில் பவானி ராஜேந்திரனுக்கும், அமைச்சர் சுப.தங்கவேலனுக்கு இடையில் காமுசா; நெல்லையில் மாவட்டச் செயலாளர் கருப்பசாமி பாண்டியனை ஒழிக்க ஒரு கூட்டம் தொடர்ந்து முயன்று வருகிறது.

● கடலூரில் அமைச்சர் எம்.ஆர்.கே. பன்னீர் செல்வத்தின் தடாலடிப் போக்கு.

● சிவகங்கையில் அமைச்சர் பெரிய கருப்பனை சிறிய கருப்பனாக்க எதிர்க்க ஸ்டாலின் ஆதரவாளர்கள் தூத்துக்குடியில் அமைச்சர் கீதா ஜீவன், அனிதா ராதாகிருஷ்ணன், ஜெயதுரை கே.எஸ்.ராதாகிருஷ்ணன் முதலியோரின் மூவர் அணி;

● காஞ்சிபுரத்தில் அமைச்சர் அன்பரசனுக்கும், தாம்பரம் எம்.எல்.ஏ. ராஜாவுக்கும் தொடரும் வில்லங்கம்;

● விருதுநகரில் அமைச்சர் கே.கே.எஸ்., எஸ்.எஸ்.ஆர். மற்றும் தங்கம் தென்னரசுக்கிடையில் பனிப்போர். இப்படியே தமிழகமெங்கும் ஒவ்வொரு அளவில் கூட கசப்புகள் தொடர்கின்றன. இந்த நிலையில், சட்டமன்ற வேட்பாளர் தேர்வு நடுநிலையாக அமையாவிடில், விரிசல் அதிகமாகும். என்னதான் பணத்தைத் தண்ணீராகச் செலவழித்து தேர்தலைச் சந்தித்தாலும் பெரிய ரிஸ்க்தான்'' என்கிறார், அந்த மூத்த உடன்பிறப்பு.

- சஞ்சயன்





# பற்றி எரியும் பெட்ரோல்!

புலி வருது புலி வருது என்று சொல்லப் பட்ட பெட்ரோலியப்புலி கடைசியாக வந்தேவிட்டது. மத்திய அரசு பெட்ரோல் விலையை லிட்டருக்கு ரூ.3.50-ம், மண்ணெண்ணெய் விலையை லிட்டருக்கு ரூ.3-ம், டீசல் விலையை லிட்டருக்கு ரூ.2-ம், சமையல் எரிவாயு விலையை ரூ.35-ம் உயர்த்திவிட்டது.

அத்தோடு, இனிமேல் பெட்ரோல் விலையை சர்வதேசச் சந்தை நிலவரத்துக்கு ஏற்ப, எண்ணெய் சுத்திகரிப்பு நிறுவனங்கள் நிர்ணயித்துக்கொள்ளலாம் என்று சுதந்திரமும் கொடுத்துவிட்டது. டீசல் விலையும் சர்வதேசச் சந்தையை ஒட்டி நிர்ணயிக்கப்படும் நாள் வெகு தொலைவில் இல்லை.

மக்கள் முதுகில் அடிமேல் அடி விழுந்துகொண்டிருக்கிறது.

**ஏன் இந்த விலையேற்றம்?**

எண்ணெய் சுத்திகரிப்பு நிறுவனங்கள் நஷ்டத்தில் இயங்குகின்றன. ஒவ்வொரு நாளும் அவை கோடிக்கணக்கில் இழப்பைச் சந்திக்கவேண்டியிருக்கிறது. அதனால், இந்த விலையேற்றம் தவிர்க்க முடியாதது ஆகிவிட்டது என்ற வழக்கமான காரணம்தான் இம்முறையும் சொல்லப்படுகிறது.

இம்முறை விலையேற்றத்தோடு இன்னொரு குண்டும் விழுந்திருக்கிறது. அது, சர்வதேசச் சந்தையில் கச்சா எண்ணெயின் விலை, ஏற்ற இறக்கங்களுக்கு ஏற்ப, இங்கேயும் பெட்ரோல் விலையை மாற்றி அமைத்துக்கொள்ளலாம் என்பது. இதை 'பிரைஸ் டீரெகுலேஷன்' என்று சொல்லுவார்கள். இத்தனை ஆண்டுகளும் இந்தி






யாவில் பெட்ரோலியப் பொருள்களின் விலையை அரசே நிர்ணயித்து வந்தது. சர்வதேசச் சந்தையில் கச்சா எண்ணெயின் விலை என்னவாக இருந்தாலும், இந்தியாவுக்குள் விற்கப்படும் பெட்ரோலியப் பொருள்களின் விலையை அரசு தன் கட்டுப்பாட்டுக்குள் வைத்திருந்தது.

ஆனால், இப்போது பெட்ரோல் விஷயத்தில் அந்தக் கட்டுப்பாட்டை அரசு விலக்கிக்கொண்டுள்ளது ஏன்?

மீண்டும் சர்வதேசச் சந்தையில் கச்சா எண்ணெயின் விலை உயரப்போகிறது. சென்ற முறை கச்சா எண்ணெய் பீப்பாய் 125 டாலர் வரை சென்றபோது, அதன் மொத்த சுமையையும் அரசே ஏற்கவேண்டி வந்தது. இம்முறையும் அதே போன்ற சூழல் உருவாகிவிடலாம். அதைத் தவிர்க்கவே, விலை உயர்வை மக்கள் தலைமேல் கட்டப் பார்க்கிறது என்று விவரம்

**ஆர்.வெங்கடேஷ்**

**"கொள்ளையடிக்கக் கொடுத்துவிட்டார்கள்!"**

**ராஜா .டி : (தேசியச் செயலாளர், இந்திய கம்யூனிஸ்ட் கட்சி)**

கச்சா எண்ணெய் விலையேற்றம் காரணமாகச் சந்தை விலைக்கு பெட்ரோல் டீசல்களை விற்க முடியாமல், எண்ணெய் நிறுவனங்கள் ஆயிரக் கணக்கான கோடிகள் நஷ்டமடைவதாக அரசு சொல்கிறது. எனவேதான் இந்த விலையேற்றம் என்று பிரதமர் சொல்கிறார். கச்சா எண்ணெய் முப்பத்திஎட்டு டாலராக விலை குறைந்த போது இவர்கள் விலையைக் குறைக்கவில்லை. இறக்குமதி செய்யப்படும் கச்சா எண்ணெய் சுத்திகரிப்பு செய்து விற்கப்படுகிறது. சுத்திகரிப்புச் செலவைக் கணக்கில் வைத்துக் கொண்டால்கூட, இந்த அளவுக்கு விலை உயர்த்த வேண்டிய அவசியமில்லை. மத்திய அரசின் இறக்குமதி வரி, சுங்கத் தீர்வை, மாநில அரசின் விற்பனை வரி ஆகியவை காரணமாகத்தான் இந்த அதிகபட்ச விலை. எனவே, மத்திய மாநில அரசுகள் நினைத்தால் விலையைக் குறைக்க முடியும். தவிர, எண்ணெய் நிறுவனங்களின் திட்டமிடப்படாத (Non-plan) ஆடம்பர மற்றும் தண்டச் செலவுகளைக் குறைத்தாலே, பெருமளவு நஷ்டத்தைக் குறைக்க முடியும். மேலும் நமது நாட்டிலேயே இருபது சதவிகிதம் தேவையை ஈடுகட்டும் அளவுக்கு எண்ணெய் வளமிருக்கிறது.



"எண்ணெய் நிறுவனங்களே சந்தைப் பொருளாதாரத்துக்கு ஏற்பப் பெட்ரோல் விலையை நிர்ணயித்துக் கொள்ளலாம் என்பதன் மூலம், தி.மு.க. காங்கிரஸ் ஐக்கிய முன்னணி அரசு, தனியார் எண்ணெய் நிறுவனங்களுக்குக் கொள்ளையடிக்கும் உரிமையைக் கொடுத்துவிட்டது."

- ப்ரியன்

தெரிந்தவர்கள் சொல்லுகிறார்கள்.

இன்னொரு காரணம், ரிலையன்ஸ் போன்ற தனியார் எண்ணெய் சுத்திகரிப்பு ஆலைகள் கொடுக்கும் பிரஷர். தனியார் ஆலைகள் தாம் சுத்திகரிக்கும் பெட்ரோலியப் பொருள்களுக்குத் தம் விருப்பம்போல் விலை வைத்துக்கொள்ள அனுமதிக்க வேண்டும் என்று பல ஆண்டுகளாகக் கேட்டு வருகிறார்கள்.

பெட்ரோலை அடுத்து, டீசலுக்கும் சர்வதேசச் சந்தைக்கேற்ப விலை நிர்ணயித்துக் கொள்ள அனுமதி வழங்கப்பட

**குடும்பத் தலைவி கலாவதியிடம் கேட்டபோது...**

"பெட்ரோல் டீசல் விலையால, அதிகமான காய்கறி எடுத்துக்கிட்டு வர்ற வண்டிங்க ரேட்டும் அதிகமாகி, காய்கறி விலையும் அதிகமாயிடும். கேஸ் விலையும் அதிகமாயிடுச்சு! இதெல்லாம் எங்கள மாதிரி நடுத்தரக் குடும்பத்தை ரொம்ப பாதிக்கும்.

இதனால் கலைஞர் ஆட்சிக்கும் கெட்ட பேரு! காங்கிரஸ் கட்சி இதை உடனே குறைக்கலேன்னா அடுத்த முறை சந்தேகம்தான். நாங்க வெறும் டி.வி. பார்த்துக்கிட்டு காலத்தை ஓட்ட வேண்டியதுதான்!"



**என்ன தலைகீழாக நின்றாலும், மன்மோகன் விலையேற்றத்தை விலக்கிக்கொள்வதாகத் தெரியவில்லை.**

இருக்கிறது.

புள்ளிவிவரப் புலியான நிதி அமைச்சர் பிரணாப் பாபு, பெட்ரோலியப் பொருள்கள் விலையேற்றத்தினால், நாட்டின் மொத்தப் பணவீக்கம் 0.9 சதவிகிதமே உயரும் என்று ஆரூடம் சொல்லியிருக்கிறார். பிரதமர் மன்மோகன் சிங்கோ மக்கள் விலையேற்றத்தைச் சரியான கோணத்தில் புரிந்துகொள்ளுவார்கள் என்று திருவாய் மலர்ந்தருளியிருக்கிறார்.

ஏற்கெனவே உணவுப் பணவீக்கம் பதினேழு சதவிகிதத்துக்கு மேல் போய் விட்ட நிலையில், பெட்ரோலியப் பொருள்களின் விலையேற்றம், மக்களின் வயிற்றெரிச்சலில் இன்னும் எண்ணெயைத்தான் வார்த்திருக்கிறது. அத்துடன், தனியார் நிறுவனங்கள் மற்றும் சர்வதேச அழுத்தங்களுக்குக் கட்டுப்பட்டு இந்தியாவைத் திவாலாக்கிக்கொண்டு இருக்கிறது காங்கிரஸ் என்ற குற்றச்சாட்டும் உரக்க ஒலிக்கிறது.

வழக்கம்போல், பெட்ரோலியப் பொருள்களின் விலையேற்றம் என்று எதிர்க்கட்சிகள் குரல்கொடுக்க ஒரு வாய்ப்பை ஏற்படுத்திவிட்டது. இந்நிலையில், பெட்ரோலியப் பொருட்களுக்கான விற்பனை வரியை தமிழக அரசு குறைத்துக் கொள்ளாது என்று முதல்வர் கருணாநிதி அறிவித்திருப்பது அதிர்ச்சி தருகிறது.

என்ன தலைகீழாக நின்றாலும் மன்மோகன் விலையேற்றத்தை விலக்கிக் கொள்வதாகத் தெரியவில்லை.

# கல்கி

இணைந்து வழங்கிய Sri Pylsani JEWELS

# கோடைக்கால கொண்டாட்டமாய் ஆறுவாரப் போட்டிகளுக்கான விடைகள்:

## 1

**இடமிருந்து வலம்**

1 வெங்காயம்
4 லட்டு
5 கோஸ்
6 பரங்கி
10 வாணி
11 தேங்காய்
12 ரிப்பன்

**மேலிருந்து கீழ்**

1 வெற்றிலை
2 காஞ்சிபுரம்
3 வடு
4 லஸ்ஸி
7 கிழங்(கு)
8 பேணி
9 கேசரி
10 வாய்வு
11 தேன்

## 2

1. மைசூர்
2. பேலூர்
3. காஷ்மீர்
4. குன்னூர்
5. பெங்களூர்
6. ஜெய்ப்பூர்
7. காந்தி நகர்
8. மயிலாப்பூர்

## 3

1. ஈ
2. ஐ
3. எ
4. அ
5. இ
6. ஒ
7. ஆ
8. உ
9. ஊ
10. ஏ

## 4

1. c
2. f
3. e
4. b
5. a
6. d

## 5

1. பாரிஸ்
2. புருவம்
3. அஜந்தா
4. தரமணி
5. நதிக்கரையில்
6. முதுகு
7. கொலஸ்ட்ரால்
8. பூனை நடை

## 6

1. விசிறி
2. விமான நிலையம்
3. கால்பந்து
4. தொப்பி

## ப்ளஸ்

● ஜோஸப் விஜய் சந்திரசேகர் என்கிற, 36 வயதே நிரம்பிய விஜய் இதுவரை 50-க்கும் மேற்பட்ட படங்களில் நடித்து விட்டார்.

● 'இளைய தளபதி' என்று அவரது ரசிகர்களால் அன்புடன் அழைக்கப்படுபவர். உலகம் முழுவதும் 32,000 ரசிகர் மன்றங்கள் உள்ளன.

● வெற்றிகரமாக ஓடிய படங்கள் ஒரு டஜனுக்கு மேல். திருப்பாச்சி, போக்கிரி, கில்லி, குஷி, பூவே உனக்காக, ஃப்ரண்ட்ஸ், பிரியமானவளே, திருமலை ஆகியவை அதில் அடக்கம். பின்னணிப் பாடகராகவும் பளிச்சிடக்கூடியவர்.

● ஒரு கட்டத்தில் லயோலா கல்லூரி மாணவர்கள் எடுத்த கருத்துக் கணிப்பில், இவரது பாப்புலாரிட்டி ரஜினியையும் தாண்டியது. அமுல்பேபி முகத்துக்கு ஆயிரக்கணக்கில் இளம் ரசிகைகள்.

● பெரிய பலம், அவரது குடும்பம். மகனைத் தூக்கி நிறுத்த எக்ஸ்ட்ரா பவருடன் வேலை செய்பவர் அப்பா இயக்குநர் சந்திரசேகர்.

● "தயாரிப்பாளர்களுக்கு எந்த விதத்திலும் நஷ்டத்தைக் கொடுக்கக்கூடாது" என்று செயல்படும் நல்ல உள்ளம். படப்பிடிப்புக்கு வந்தால் தான் உண்டு, நடிப்பு உண்டு என்று ஓய்வு கிடைத்தால் கேரவானுக்குள் புகுந்து விடுவார்.

● சண்டைக் காட்சிகளில் விறுவிறுப்பு கூட்ட ரிஸ்க் எடுக்கும் துணிச்சல்.

● பிறந்த நாளில் ஏழைப் பெண்களுக்குத் திருமணம், மாணவ, மாணவிகளுக்கு படிப்புக்கு நிதியுதவி, பிறந்த குழந்தைகளுக்கு மோதிரம் என்று வழங்கும் தர்ம சிந்தனையாளர். சர்ச்சையாகும் விவ



# (+)ப்ளஸ் (-)மைனஸ் = பெரும்புள்ளி

காரங்களில் கருத்து சொல்லாமல் நழுவும் திறமை.

**மைனஸ்**

● ஆபாசப் பாடல்கள், இரண்டு குத்தாட்டம், சண்டைக் காட்சிகள் என்ற ஒரே மாதிரியான ஃபார்முலா படங்கள்.

● விஜய் என்று குறிப்பிட்டால், ஒரு கேரக்டர் ரோல்கூட நினைவுக்கு வருவதில்லை.

● அப்போதைக்கு அப்போது துளிர்விடும் அரசியல் ஆசை. மக்கள் இயக்கம் என்று துவங்கி ஐம்பது லட்சம் உறுப்பினர்களைச் சேர்க்க எடுத்த முயற்சி அரைகுறையாக நிற்கிறது.

● ராகுலைச் சந்தித்து காங்கிரஸில் சேருவதற்குத் தயாரான நிலையில் திடீரென ஜகா வாங்கி, ''இப்போது அரசியல் இல்லை'' என்று அடித்த பல்டி.

● குருவி, வில்லு என படுத்துப் போன படங்களின் எண்ணிக்கை அதிகரிக்கிறது. வேட்டைக்காரனும், சுறாவும் அதிக விலைக்கு விற்கப்பட்டதில் கையைச் சுட்டுக்கொண்ட விநியோகஸ்தர்கள் ''இனி விஜய் படங்கள் என்றால் வில்லங்கமே'' என்று பயப்படுகிறார்கள்.

● அவரது அரசியல் ஆசைகளைத் தூண்டி விடும் ரசிகர்களை அடக்க முடியாமல் அல்லாடும் தர்மசங்கடம்.

- ஸ்ரீநி

# இளைய தளபதியே இறங்குமுகம் ஏன்!

'சப்தஸ்தான விழா' என்பது என்ன என்பதை (கண்டறியாதன கண்டேன்) இதைவிடத் தெளிவாக வேறு எவரும் விளக்க முடியாது! கண்டு அறியாதவற்றையும், கேட்டு அறியாதனவற்றையும் அறிந்துகொள்ள உதவுகிறது இத் தொடர்.

- லலிதா வெங்கடரமணன், சென்னை-4

ஐ.ஏ.எஸ். தேர்ச்சி பெற்று, அரசியல் வாதிகளிடம் மாட்டிக் கொண்டு, அவஸ் தைப்படுவதை விடக் கண்ணியமாக கோயம்பேடு மார்க்கட்டில் கத்திரிக்காய் மூட்டைத் தூக்கிப் பிழைப்பு நடத்தலாம் என்றுதான் தோன்றும், உமா சங்கர் ஐ.ஏ.எஸ். படும் அவஸ்தையைப் பார்த்து.

-வி.ஜி.சத்தியநாராயணன், நங்கநல்லூர்

யதார்த்தத்தைப் பிரதிபலித்தது, பனி மலரின் சலனம்.

- என்.கோமதி, நெல்லை-7

செம்மொழி மாநாடு முடிந்த இந்தத் தருணத்தில் கல்கி வார இதழில் (25.1.81) வெளிவந்த மீ.பா.சோமுவின் ஐந்தாம் உலகத் தமிழ்நாடு கட்டுரையை மீண்டும் வெளியிட்டு (29 வருடங்களுக்குப் பிறகு) அரசியல் தலைவர்களின் அரிய காட்சிகளு டன் (எம்.ஜி.ஆர். உட்பட) வாசகர்களுக்கு இன்ப அதிர்ச்சியைக் கொடுத்து விட்டீர் கள். கல்கிக்கு நிகர் கல்கிதான். ஆங் காங்கே சங்க காலச் செய்யுள்கள், அறிஞர் கள் கூறியவை. வாழ்த்துக்கள்.

- சி.அனுஷா, சென்னை.

04.07.2010- இந்த வாரக் கார்ட்டூன் அரசியல்வாதிகளின் தகிடுதத்தங்களைப் படம்பிடித்துக் காட்டியது போல் இருந்தது. வரைந் தது யாருனே தெரிய லையே! எந்த ஸ்கூல் லைங்கண்ணா படிச் சீங்க? யாருங்கண்ணா நீங்க..?

- சரா ஏ.முரளி, கள்ளக்குறிச்சி

# என்னையும்



உலகத் தமிழ்ச் செம் மொழி மாநாட்டிற்கு அழைக்கும் விளம்பரத் தில், 'குறளுக்குப் பொருள் கூறிக் குறலாய்ந்த புலமை யால்' என்ற தவறு ஏற்பட்டுள் ளதைத் தாங்கள் கவனிக்காமல் விட்டதேனோ?

-அ.க.கிருஷ்ணன், புதுச்சேரி-4.

வட்டமேஜை

**க**திர்பாரதி கவிதைகள் கற்கண்டு உருண்டைகள்!

-இராம.வேதநாயகம், வடமாதிமங்கலம்

**ரா**வணன் பாடகி கவியை மட்டும் ஏமாற்றவில்லை, என்னையும் ஏமாற்றி விட்டான். எப்படி? சென்ற வாரம் கல்கியைப் பிரித்தவுடன் பெரியவரின் அருள் வாக்கு கண்டேன். ஆனந்தமாக இருந்தது. இந்த வாரம் ராவணனின் ஆக்கிரமிப்பு! தயவுசெய்து அருள்வாக்கை முதன்மைப் படுத்துங்கள்.

- ஓ.ரங்கசாமி, ஸ்ரீரங்கம்

**கி**ரேஸியின் ஹாஸ்ய நாடகம் செம கலகல. கதாபாத்திரத்தின் பெயர்கள் கூட சிரிப்பை வரவழைக்கும்படி இருந்தன.

**கிழக்குப் பதிப்பகம் வழங்கும் ரூ.250 மதிப்புள்ள நூல்கள் பரிசு பெறும் கடிதம்:**

**இ**லங்கையில் போர் ஓய்ந்த பிறகும், ராஜபக்ஷே மேல் உள்ள ஈகோவால் யாரும் இலங்கை செல்லக் கூடாது என்று சொல்வது சரியல்ல. சரத்குமார் சொல்வதே சரி! இங்கிருக்கும் (இலங்கைத் தமிழர்பால் பற்றுள்ள) தலைவர்கள் எல்லாம் இலங்கைக்குச் சென்று வந்து கொண்டிருந்தால்தான், அங்கிருக்கும் தற்போதைய உண்மையான சூழ்நிலையை உலகுக்கு உணர்த்த முடியும்.

-கு.ப.இரகுநாதன், பூவிருந்தவல்லி.

# ஏமாற்றிவிட்டான் ராவணன்!

('கிரேஸியைக் கேளுங்கள்'க்கு விடுமுறை கொடுத்தால் இப்படியொரு ஹாஸ்ய நாடகம் கிடைக்குமோ?)

-என்.பாலகிருஷ்ணன், மதுரை

'**சா**ணை பிடிப்பது' தெரியும், அது என்ன 'சாணம் பிடிப்பது?' திருவாரூர் பாபு (ஒரு மழை நாள்)வைக் கேட்டுச் சொல்லுங்களேன்!

- டி.என்.பாலகிருஷ்ணன், சென்னை-91

**ஜோ**க்ஸ் ரொம்ப நிறைவாய் இருந்தன. கோவையில் கூட ஐந்து வாரம்தான் செம்மொழி மாநாடு. ஆனால், கல்கி இரண்டு வாரம் கொண்டாடி விட்டது. ஜோர். படு உற்சாகம்தான்.

- எஸ்.மீனா, ஸ்ரீரங்கம்

**எ**டியூரப்பா செய்ய நினைப்பது தேவையில்லாத காரியம்தான். வீண் பிரச்னைகள்தான் வரும். சட்டத்தை அமல் படுத்துவதும் கடினம். ஏதாவது செய்து கட்சியை வீணாக்கப் பார்க்கிறார். அது எதிர்மறையாகத்தான் முடியும்.

- சத்யா, திருவல்லிக்கேணி

'**த**ராசு பதில்கள்' நறுக்குன்னு இருந்தது ஐயா.

- த.புகழேந்தி, கூகூர்.

# பேனாவை மூடு வாயை மூடு!

**அ.இ.அ.தி.மு.க. இலக்கிய அணித் தலைவர் பழ.கருப்பையாவின் வீட்டுக்குள் புகுந்த கும்பல், அவரையும் தாக்கிவிட்டு, கார் மற்றும் வீட்டுப் பொருட்களை சேதப்படுத்திவிட்டுச் சென்றிருக்கிறது. நடந்தது என்ன? எதற்காக இந்த தாக்குதல்? அதிர்ச்சியிலிருந்து மீளாத பழ.கருப்பையாவிடம் பேசினோம்.**

**என்ன நடந்தது?**

''அன்று (27.6.2010) மதியம் மூன்று மணி இருக்கும். வாட்ட சாட்டமாக இருந்த ஆறு பேர் உள்ளே நுழைந்தார்கள். நீதான் கருப்பையாவா? பெரிய எழுத் தாளனா... எங்க கலைஞரைத் தாக்கி எழுத



நீ என் பெரிய்ய...ய '' என்றெல்லாம் ஆபாச அர்ச்சனை செய்து கன்னத்தில் குத்தினார்கள். கார் கண்ணாடிகளை உடைத்தார்கள். வீட்டிலுள்ள பொருட் களை உடைத்துவிட்டு மின்னலென மறைந்து விட்டார்கள்.''

**உங்களை ஏன் தாக்க வேண்டும்?**

''ஈழத்தை கடுகாடாக்கிவிட்டு கோவை யில் என்ன கொண்டாட்டம்? இனத்தை அழித்துவிட்டு மொழிக்கு என்ன மாநாடு? நிச்சயமாக தமிழ்த்தாய் அந்த மாநாட்டுக்கு வரமாட்டாள்'' என்று துக்ளக்கில் எழுதி னேன். தவிர ஜெயா தொலைக்காட்சி யிலும் பேசினேன். மேலும் 'தினமணி' யில் நான் எழுதும் கட்டுரைகளால் கருணாநிதி எரிச்சலடைந்திருக்கிறார் என்பதும் எனக்குத் தெரியும். எனவேதான், ஆளும் கட்சியின் ஆசிர்வாதத்தோடு இந்தத் தாக்குதல் நடந்திருக்கிறது.''

**காவல்துறை விசாரணை செய்து கொண்டிருக்கும்போது, முன்கூட்டியே இப்படிச் செய்வது சரியா?**

''தன்னைப் புகழ்வதற்காகத் தொலைக் காட்சிகளை உருவாக்கிக் கொள்வது; பெரிய பத்திரிகைகளை விளம்பர தானத் தால் கவிழ்ப்பது, உடன்படியாத பத்திரி கையாளர்களை மிரட்டுவது; எதிர்த்துக் கருத்து சொல்பவர்களை ஆள் வைத்து அடிப்பது; வீட்டினுள் புகுந்து தாக்குவது என இன்று சகஜமாகிவிட்ட பலவற்றுக்கு தி.மு.க.தான் முன்னோடி... எனக்கு எச்சரிக்கை விடுத்திருக்கிறார்கள். 'பேனாவை மூடு; வாயை மூடு' என்பது தான் இந்தத் தாக்குதல் சொல்லும் செய்தி. சில காலமாக மூட்டை கட்டி வைத் திருந்த அராஜக ஆட்டத்தை மீண்டும் துவங்கிவிட்டது தி.மு.க.''

**ஆளும் கட்சியை எதிர்க்கட்சிகளைச் சேர்ந்த பலர் மேடைகளில் கடுமையாக விமர்சித்து வரும் நிலையில் உங்கள் மீது**

மட்டும் ஏன் இந்தத் தாக்குதல்!

''கருணாநிதியோடு எனக்கென்ன பங்கு பாகச் சண்டையா? வயல் வரப்புச் சண்டையா? எல்லாவற்றிலும் போலியாக நடந்து கொள்ளும் ஒரு மனிதரைத் தக்க நியாயங்களுடன் அம்பலப்படுத்துவது என் ஜனநாயகக் கடமை. என் கட்டுரைகளும் பேச்சுக்களும் மக்கள் மனத்தில் தாக்கத்தை ஏற்படுத்தி, ஆளும் கட்சி மேல் அதிருப்தியை உருவாக்கும் என்பது தி.மு.க. வினருக்கு நன்றாகவே தெரியும். கருத்தோடு கருத்து மோத அவர்களுக்குத் துணிவில்லை. ஒரு சம்பவம் நினைவுக்கு வருகிறது. 'எந்த ஒரு கருத்தும் எதிர் கருத்தால்தான் வளர்கிறது' என்ற தத்துவம் தெரிந்தவர் ராஜாஜி. அவரைத் தி.மு.க. வினர் இழித்தும் பழித்தும் பலமுறை பேசியிருக்கிறார்கள். ஆனால், முதல் அமைச்சர் பொறுப்பில் சகல அதிகாரங்களுடன் இருந்த ராஜாஜி தமது வாதத் திறமையால் அவர்களுக்குப் பதிலளித்தார். ஒரு முறை கட்சியில் தம் கருத்துக்கு எதிர்கருத்து சொன்னவரை வீடு தேடிச் சென்று பாராட்டினார். 'மாற்றுக் கருத்துக்களே ஜனநாயகத்தின் உயிரோட்டம்' என்பதை உணர்த்தும்படி நடந்தவர் ராஜாஜி. இப்படிப்பட்ட தலைவர்கள் இருந்த தமிழகத்தில், அராஜகத்தைக் கட்டவிழ்த்து விடுவது அரசியலில் ஒரு சீரழிவு. தவறான மனிதரிடம் அதிகாரம் சிக்கிக் கொண்டதால் வந்த விளைவு இது.''

**சமீபகாலமாய் உங்கள் கருத்துகளிலும் தனிநபர் தாக்குதல் தூக்கலாக இருக்கிறதே?**

''தமிழினத்துக்கு துரோகம் செய்தவர்கள் இருவர் என்று எழுதினால் புரியுமா? கருணாநிதியும், ஈழத்துக் கருணாவும்தான் என்று குறிப்பிட்டு எழுதினால்தானே புரியும். பெயர் குறிப்பிட்டு எழுதுவது என்பது தனிநபர் தாக்குதலா? இல்லை வரலாற்று ஆராய்ச்சியா? இந்த விஷயத்தை நான் எப்படித்தான் சொல்ல வேண்டும். தனிநபர் தாக்குதல் என் நோக்கம் அல்ல. இதுவரை எழுத்திலும் பேச்சிலும் கண்ணியம் காத்து வருகிறேன்.''



**காவல்துறை இரண்டு குழுக்களை அமைத்துத் தீவிரமாகப் புலனாய்வு செய்து வருகிற சமயத்தில் தி.மு.க. மீது நீங்கள் குற்றம் சுமத்தாமல் பொறுமை காக்க வேண்டாமா?**

''தமிழகத்தில் காவல்துறை சுதந்திரமாக இயங்கவில்லை. ஆளும் கட்சிக்காரர்களைக் கைது செய்யும் துணிச்சல் அவர்களுக்கு இருக்கிறதா? இது போன்ற பயமுறுத்தல்களால் என் பேச்சுரிமைக்கும் எழுத்துரிமைக்கும் யாரும் தடைபோட முடியாது.''

**- ப்ரியன்**

படங்கள் : **ராஜன்**

# செம்மொழி மாநாடு பதிவுகள்!

## சலிக்காத பேராதரவு

- டாக்டர் சுதா சேஷய்யன்

முதல் நாள் இனியவை நாற்பது பேரணி தொடங்கி, அலங்கார வாகனங்கள் வந்து கொண்டிருந்தன. அவினாசி சாலையில், உயரமான ஒரு மேடையில் நின்றுகொண்டு அதற்கான வர்ண னையைச் சொல்லவேண்டும் என்று ஏற்பாடு. கண்ணுக்கெட்டும் தொலைவில் அலங்கார வாகனங் கள் தெரியத் தொடங்கின.

வர்ணனையை ஆரம்பிக்க வேண்டும் என்று நினைத்துக்கொண்டு இருந்தபோது, எங்கள் பக்கம் சாரி சாரியாக மக்கள் திரளத் துவங்கினார்கள். எங்கி ருந்து வருகிறார்கள் என்று நின்று யோசிப்பதற்குள், சாலை முழுவதும் மக்கள் வெள்ளம். உடனே உயர மான மரக்கிளைகள், கம்பங்கள் என்று ஊர்வலத்தைப் பார்க்க மக்கள் ஏறத் துவங்கிவிட்டார்கள். அலை அலையென மக்கள்.

அதேபோல், செம்மொழி மாநாடு நடைபெறும் வளாகத்துக்கு வெளியே, ஆறு கிலோமீட்டர்கள் தள்ளித்தான் பார்வையாளர்கள், மக்கள் தம் வாகனங் களை நிறுத்தவேண்டும். நான் ஒரு முறை வெளியே செல்லவேண்டி யிருந்தது. அப்போதுதான் கவனித்தேன், எங்கெங் கிருந்தோ வரும் பெருந்திரளான மக்கள், தம் வாகனங்களை நிறுத்தி விட்டு, அந்த ஆறு கிலோ மீட்டர் தூரத்தையும் நடந்தே கடந்து வந்து, அதற்கு பிறகு மாநாட்டுக் கண்காட்சியைக் காண இன்னும் இரண்டு மணி நேரங்கள் வரிசையில் உற்சாகமாக நின்றார்கள். துளியும் சோர்வில்லை. வருத்த மில்லை.



என்னை ஆச்சரியத் தில் ஆழ்த்தியது மக் களின் சலிக்காத பேரா தரவுதான். நான் எங்குமே கண்டிராத காட்சி அது.

***

# இது நிச்சயம்

இணைய மாநாட்டின் ஒரு அரங்குக்குத் தலைமை யேற்கப் போயிருந்த கவிஞர் திலகபாமா அளித்த மாநாடு டிப்ஸ்:

## எல்லை தகர்த்த குஷி

நான் மாநாடு போய் ஒரு அரங்கில் பேசிவிட்டு வந்ததைக் குடும்பமும் சமூகமும் ஒரு பெரிய அங்கி காரமாய், கௌரவமாய்க் கருதியதை நிஜமாக உணர முடிந்தது. எல்லாப் பெண் எழுத்தாளர்களையும் ஒரே இடத்தில், ஒரு நோக்கத்துக் காகச் சந்தித்துக் கொண்டது குழு எல்லை தகர்த்த குஷி. அறிவு ஜீவிகளைத் தமிழால் ஒன்று சேர்த்துக் கைகுலுக்க வைத்தது நிச்சயம் சாதனை தான்!

## கறுப்பு எதிர்ப்பின் அடையாளம்

மாநாட்டுக்கு வெள்ளை சுடிதாரும் கறுப்புத் துப்பட் டாவுமாக, கல்லூரி வண்ணத் துப் பூச்சியாய் நுழை வாயிலுக்கு வந்து நின்றாள் ஒரு பெண். துப்பட்டாவை அணியக்கூடாது என்று

காவலர்கள் தடுக்க, மேல்புறம் துப்பட்டா இல்லாமல் எப்படி ஆண்கள் மத்தியில் கூட்டத்துக்குள்போக முடியும் என்று, கடும்வாதம் செய்தாள். மாநாட்டைவிடத் துப்பட்டாதான் முக்கியம் என்று மாநாட்டுக்குச் செல்லாமல் வெளியேறினாள் வெற்றியோடு அந்தப் பெண்.



★ மாநாட்டில் பெண் படைப்பாளிகள்...

### என் பெயர் நாய் (ஜிம்மி)

அடையாள அட்டைகள் குன்று போல் குவிந்திருந்தன. சம்பந்தப்பட்டவர்களுக்கு அடையாள அட்டையைத் தேடித்தர முடியாமல் திணறினர். பின், உடனடியாக அங்கேயே படம் பிடித்து அட்டை தயாரிப்புகள் துவங்கின. இணைய தளத்தின் மூலம் விண்ணப்பித்த

# ாதனைதான்!

சிலர் தங்கள் புகைப்படத்துக்கு பதிலாகப் பூக்களின், செல்ல பிராணியின் படத்தை அனுப்பி வைக்க, அடையாள அட்டையிலும் அதுவே புகைப்படமாக இடம் பெற்று சிந்தனைச் சிரிப்பை மலர செய்தது.

### உலகளாவிய இலக்கியக் கூட்டம்

★ பொதுமக்களை, கல்லூரி மாணவர்களை, பார்வையாளர்களாக அனுமதித்து இருந்தால்... இணைய மாநாட்டு அரங்கம் காலியாக இல்லாமல், அவர்களே கட்டுரை வாசித்து, அவர்களே கேட்டுக் கொள்கிற இலக்கியக் கூட்டம் போல இருந்ததைத் தவிர்த்து இருக்கலாம்.

### நொந்து நூலாக்கிய நூல்!

கையில், தான் சமீபத்தில் வெளியிட்ட கவிதை நூலான 'ஆயுத எழுத்து' நூலை வைத்திருந்தார் தமிழ்முதல்வன், சக தோழர்களுக்குக் கொடுக்க. காவலர்கள் அவரை மொய்த்து கடும் விசாரணைக்குப் பின் அவரைப் பற்றி, தகவல்கள் பெற்று, அதன்பிறகு விட்டனர். மனைவி மக்களோடு வந்த அவர் நொந்து நூலானார்.

**- வெ.சு**

★ கவிஞர் மதுமதிதாவுடன் திலகபாமா



டேஸ்டி டேர்...

# காஃபி தராத கணவன் டைவர்ஸ்!

**கா**லை எழுந்து ஃபிரஷ் செய்தவுடன், கடச்கட ஆவி பறக்க கமகம காஃபியைக் குடிக்கும் நாம், அதைக் கண்டுபிடித்த ஆடுகளுக்கு நன்றி சொல்கிறோமா? காப்பி குடித்தால் சுறுசுறுப்பு கிடைக்கும். ஓடி ஓடி வேலை செய்யலாம்... என்றெல்லாம் கண்டுபிடித்தது ஆடு சமூகம்தான்!

பல நூற்றாண்டுகளுக்கு முன் எத்தியோப்பியாவில் காலிர் என்ற ஆடு மேய்ப்பவன். ஒருநாள் தன் ஆடுகள் ஏதோ ஒரு பொருளைத் தின்ற பிறகு படு உற்சாகமாகத் தாறுமாறாய் எனர்ஜி கிடைத்து கிறுகிறுத்து இருப்பதைப் பார்த்தான். தானும் 'அதைத் தின்றால் என்ன' என்று சுவைத்தான். செர்ரியைப் போன்ற கருப்பு விதைகளைத் தின்ற பிறகு உடல் சுண்டி விட்டதைப் போல உணர்ந்து நண்பர்கள், உறவினர்... என பொரிக செய்து சாப்பிட வைத்தான். இது நடந்தது 850 A.D.யில்...

மெள்ள மெள்ள இந்த எனர்ஜி விதைகளைப் பற்றி ஊரெல்லாம் பேச்சு. ஒரிஜினலாகப் பார்த்தால், காஃபி என்பது சாப்பிடும் வஸ்துவாக இருந்திருக்கிறது. ஆப்பிரிக்கப் பழங்குடி மக்கள் காப்பிக் கொட்டைகளை க்ரீம், வெண்ணெயுடன் பிசைந்து, ரவா உருண்டை கணக்கா சாப்பிட்டு எனர்ஜெட்டிக்கா இருந்திருக்கிறார்கள். ('காஃபி சாப்பிட்டாச்சா' என்றால் சரிதான்!)

இஸ்லாம் மதமும் காஃபியைப் பரப்புவதில் தொண்டாற்றியிருக்கிறது. புனித குர்-ஆனில் மதுவைத் தொடக்கூடாது என்ற கட்டளை இருந்ததால், மனத்திற்குப் பிடித்திருக்கிறது என்று இஸ்லாமிய மக்கள் காஃபியைத் தங்கள் தினசரி மெனுவில் சேர்த்துக் கொண்டார்கள்.



காஃபிக் கொட்டை என்பது மரத்திலிருந்து வருகிறது. சுமார் 30 அடி உயரமுள்ள மரம். மனிதன் தன் வசதிக்கேற்ப சுமார் 10 அடி உயரமுள்ள காஃபி மரங்களையே சாகுபடி செய்கிறான்.

காஃபி என்பது அரபுநாட்டு 'கஹ்வா' என்பதிலிருந்து மருவி வந்திருக்கிறது. 'தூக்கத்தைத் தடுக்கும்' என்று பொருள்! அரபு வணிகர்கள் 1000 A.D. யிலிருந்து காஃபி வியாபாரத்தில் ஈடுபட்டனர். உலகின் முதல் காஃபி ஷாப் 1453-ல் திறக்கப்பட்டது. துருக்கி நாட்டில் ஒரு விநோதமான சட்டம் அமலுக்குக் கொண்டு வரப்பட்டது. கணவன் தினசரி காஃபிக்கு ஏற்பாடு செய்யவில்லையென்றால், விவாகரத்து கோர சட்டப்பூர்வமான அதிகாரம் மனைவிக்கு உண்டு!

காஃபி வணிகத்தில் அரபு நாடு முதலிடத்தில் இருந்து வந்தது. ஜாவா, மோக்கா... என்ற காஃபிகள் காஃபிடே, காஃபி ஷாப்பில் டாப்பில். இதெல்லாம் துறைமுகத்தின் பெயருங்கோ.

காஃபிக் கொட்டைகளில் மெயினாக இரண்டு வெரைட்டி. ரோபஸ்டா மற்றும் அராபிக்கா. ரோபஸ்டா என்பது சற்றே கசப்பு மற்றும் சீப் வெரைட்டி. உலகில் முக்கால்வாசிப்பேர் விரும்பிப் பருகுவது அராபிக்கா.

நம் நாட்டைப் பொறுத்தவரை காஃபி ஆரம்பித்தது கர்நாடகாவில். (காஃபி, காவேரி எல்லாமே அங்குதான்) சுமார் 350 வருடங்களுக்கு முன்னால் சிக்மகளூரில் ஆரம்பித்தது காஃபி வைபவம்! பாபா புதனகிரி மலையில் தொடங்கியது பயணம். பாபா புதன் என்கிற ஹஜரத் ஷா ஜனாப் என்பவர், புனித மெக்காப் பயணத்தின் போது அங்கிருந்து காஃபி விதைகளைக் கொண்டு வந்து இங்கு பயிரிட, அவருடைய பெயரையே மலைக்கு வைத்துவிட்டார்கள் காஃபி விவசாயிகள்.

★ மைசூர் மகாராஜா தாராளமாக நிலங்களைக் கொடுத்தார், காஃபி பயிரிட. திப்பு சுல்தான் விவசாயிகளுக்கு இனாமும் இலவச நிலமும் கொடுத்ததாக வரலாறு.

★ 'காஃபி டே' என்று ஜப்பானியர்கள் அக்டோபர் ஒன்றை காஃபி தினமாகக் கொண்டாடி மகிழ்கிறார்கள்.

★ ஒரு காஃபி மரம் வளர்வதற்குக் குறைந்தது ஐந்து வருடங்களாகும். அதனால் காஃபி குடிக்க, பயிரிட பொறுமை தேவை.

★ காஃபியை வெளிநாட்டினர் 'கப் ஆஃப் ஜோ' என்று குறிப்பிடுவர். இரண்டாம் உலக யுத்தத்தின்போது அமெரிக்க ராணுவ வீரர்களுக்கு இன்ஸ்டண்ட் காஃபி வழங்கப்பட்டது.

★ உலகிலேயே எண்ணெய்க்குப் பிறகு அதிகமாக வியாபாரம் செய்யப்படும் பொருள் காஃபி.

**▾ லதா சேகர் ▾**



தலைமை ஏற்றிருப்பது மட்டு மல்ல, பதவிப் பிரமாணம் செய்து வைத்ததும் ஒரு பெண். புதிய பிரதம மந்திரி ஜூலியா கிலார்ட். அருகில், புன்னகையுடன் கவர்னர் ஜெனரல், க்வெண்டின் ப்ரைஸ். இந்தப் புகைப் படத்தைப் பார்த்துப் பார்த்து மாய்ந்து கொண்டிருக்கிறது ஆஸ்திரேலியா. நம் தேசத்தின் முதல் பெண் பிரதம மந்திரி. சாதாரண விஷயமா இது? அதைவிட ஆச்சரியம், இவர் ஆட்சி யைப் பிடித்த விதம். முந்தைய பிரதமரைத் தூக்கி யடித்துவிட்டு, அதிரடியாக ஆட்சியைக் கைப்பற்றியிருக்கிறார்.

ஆஸ்திரேலியா ஜூலியாவைக் கொண்டாடக் காரணம் உண்டு. ஒரு பெண், ஒரு நிறுவனத்தின் உயர் பத வியை அடைவதும்கூட அங்கே ஆச் சரியமான விஷயம்தான். அங்குள்ள பெரும் நிறுவனங்களின் தலைவர் களில், ஆறு சதவிகிதம் பேர் பெண் கள். நீதிபதிகளில், பதின்மூன்று சத விகிதம் பேர். ஆண்களுக்குச் சமமா கப் பெண்களுக்குச் சம்பளம் அளிக்கப் படவேண்டும் என்று சட்டம் வந்து நாற்பது ஆண்டுகள் கழிந்துள்ளன. இப் போதும், பெண்கள் ஆண்களின் ஊதி யத்தில் 84 சதவிகிதமே அதிகபட்சம் பெறுகிறார்கள்.



அரசியலில்...? கேட்கவே வேண் டாம். அடையாள மை வைத்து வோட்டுப் போடுவதோடு பெண்களுக் கும் அரசியலுக்கும் உள்ள தொடர்பு முடிந்துபோகிறது. மிகச் சமீபமாகத் தான் பெண்கள் காபினெட் பொறுப் புக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார் கள்.

முந்தைய பிரதமர், கெவின் ரூட்டின் அமைச்சரவையில், இடம் பெற்றிருந்த ஏழு பெண் அமைச்சர் களில் ஒருவர் ஜூலியா. முன்னதாக, தொழிற்சங்கச் சட்ட நிறுவனம் ஒன் றில் பணி. அந்நிறுவனத்தின் நிர்வாகி களில் ஒருவராகத் தமது 29வது வய தில் இவர் பொறுப்பேற்றபோது, அட என்று பலர் வியந்திருக்கிறார்கள். பள்ளி ஆசிரியர் என்பதுதான் ஆரம்பக் கனவு. பின்பு, சட்ட நிறுவனத்தில் பணி. அங்கிருந்து நேரே, அரசியல். லேபர் கட்சியில் இணைந்து, பெண் கள் அணியில் பல உருப்படியான வேலைகள் செய்து, தேர்தலில் நின்று ஜெயித்து, பலரை ஆச்சரியத்தில் மூழ்கடித்தார்.

இன்று ஜூலியா தலைமையில் புதிய மாற்றங்களுக்கு ஆஸ்திரேலியா தயாராகிவிட்டது. ●

# என் பெயர் ஜூலியா

Registered with the Registrar of Newspaper of India under No.1041/57" Registered No.TN/CC (S) DN / 144 / 09 - 11" Licensed to post without prepayment under PMG's Licence No.WPP TN / CC (S) DN / 70 / 09 /11" Registered as a Newspaper in Srilanka.